

# ஸ்ரீ ராமாநுஜன்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை



பூமன்னு மாது பொருந்திய மார்பன்—புகழ் மலிந்த
பாமன்னு மாறனடி பணிந்துய்ந்தவன்—பல்கலையோர்
தாம், மன்ன வந்தவிராமானுசன் சரணாரவிந்தம்
நாம் மன்னி வாழ நெஞ்சே! சொல்லுவோம்
அவன் நாமங்களே.


மதராஸ்

ஸத்கிரந்த பிரகாசன சபையின் வெளியீடு

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

Edited, Printed & Published by S. R. Varadarajan B. A., for Sri Vaishnava Prakasana Sabha, Madras at Sri Lakshmi Printing Works, Car street Salem.
*Editor:- P. B. Annangaracharya swami*

ஸ்ரீ:

# சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபை.

— பேட்ரன்கள் —

**250 ரூ. உதவின போஷகர்கள்**

1. ஸ்ரீ உ. வே. V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமி, M. L. அட்வொகேட். கீழ்ப்பாக்.
2. ராவ்ஸாஹிப் S. ரங்கஸ்வாமி ஐயங்கார், டிஸ்டிரிக்ட் பாரெஸ்ட் ஆபீஸர் நெல்லூர்.
3. ஜி. ஸ்ரீநிவாஸுலு செட்டியார், மூர்த்தி ஸந்து, P. T. மதராஸ்
4. ராமாநுஜ கூடம் ராமாநுஜய்யா அண்டு ஸன், P. T. மதராஸ்.
5. கோட ஸ்ரீநிவாஸய்யா குமாரர் ரங்கராமாநுஜய்யா, மதராஸ்.
6. உம்மிடி ஸ்ரீராமுலு செட்டியார்."

— ஷை ஸபையின் அங்கத்தினர்கள் —

ஸ்ரீ. P. B. அண்ணங்கராசாரியர், பிரெஸிடெண்ட்.

,, M. சக்ரவர்த்தி ஐயங்கார்,
,, A. ஷண்முகசுந்தர முதலியார், ஹானரரி ப்ரஸிடென்ஸி மாஜிஸ்ட்ரேட் } வைஸ்பிரெஸிடெண்டுகள்.

,, ஜி. முஸலப்ப ரெட்டியார், அட்வொகேட்,
,, சவல. ராமாநுஜய்யா. மெர்ச்சண்ட் } செகிரிடெரிகள்

,, காரலபாடி. ராதாகிருஷ்ணய்யா,
,, V. R. எதிராஜம் செட்டி. } உபகார்ய நிர்வாஹகர்கள்.

,, உம்மிடி. ஸ்ரீராமுலு செட்டியார், தனாதிகாரி.

. இதர மெம்பர்கள்.

1. Sriman M. Sudarsanam Iyengar, Mylapore.
2. ,, K. Rangaswamy Iyengar, China Bazar Road.
3. ,, Ramanujakutam Ramanujiah, Murthy Lane.
4. ,, G. Srinivasulu Chettiar.
5. ,, K. Venkataramanujalu Naidu (Appah & Co.)
6. ,, V. T. Munirathna Mudaliar, (Proprietor, Rathnam Press)
7. ,, K. Thiruvenkatachariar, Advocate.
8. ,, C. Subbarayalu Chettiar. Varadamuthiappan Street.
9. ,, P. E. Srinivasulu Naidu, Thiruppalli Street.
10. ,, M. Devarajulu Naidu, Retired Post Master.
11. ,, S. Pundarikaksha Naidu, China Bazar Road.
12. ,, Copparam Natesa Chettiar, 59, Anderson Street.

---

* லைப் மெம்பர்களைப் பற்றின விவரம் அடுத்த பிரசுரத்தில் வெளியிடப்படும்.

12—9—48.

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

[மதராஸ் ஸித்தாந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | ஸர்வதாரி-௵ ஆவணி-௴ | முதல் பகுதி |
|---|---|---|


எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

## ஆரம்ப விஜ்ஞாபனம்

ஒவ்வொரு வகுப்பினரும் முன்னேற்றமடைய விரும்புங்காலமாயிருக்கின்றது இக்காலம். அவரவர்கள் பல வழிகளிலும் தத்தம் கொள்கைகளைப் பரவச்செய்து தங்கள் சமயத்தை மேன்மைபெறுத்திக்கொள்ள முயல்கின்றனர். உதார குணம் வாய்ந்த மஹான்கள் எந்த மதத்திலும் வெறுப்புக்கொள்ளாமல் எல்லா மதமும் எம்பெருமானுக்கியவையே யென்று கொண்டு உவந்தேயிருப்பர்கள். ஆனாலும் தமது மதத்தின் பெருமேன்மையை உண்மையாக வுணர்ந்து அதில் அபிமானங்கொண்டிருப்பதன் பயனாக ஸ்வமதஸ்தாபனத்தோடுகூட இதரமத கண்டனமும் சிலமஹான்களுக்கு ப்ராப்தமாகின்றது. விளக்கை ஏற்றிவைத்தால் இருள் தானே அகன்றுபோவதுபோல மேன்மைதங்கிய மதத்தின் தத்துவங்களை வெளியிடவே இதர மதங்கள் தானே தலை மடியுமென நினைத்துப் பரமத கண்டனங்களில் சிறிதும் கருத்தூன்றாதே யிருப்பாருமுளர். இதுவே தற்காலம் கைப்பற்றவேண்டிய முறை.

காலத்தின் போக்கு வரவர விபரீதமாயிருத்தலால் ஆஸ்திகர்களுக்குள் வைதிகர்களுக்குள் பரஸ்பர ஹிதைஷிபாவமும். ஐகமத்யமும் அவசியம் வளரவேண்டும். இல்லையேல் நமது வைதிக

மதம் வெகுசீக்கிரத்திலேயே இருக்குமிடம் தெரியாமலொளிந்து விடும். ஆஸ்திகர்களென்றும், வைதிகர்களென்றும் சொல்லக் கூடிய வகுப்பினர் இந்நிலவுலகில் மிகக் குறைந்த எண்ணில் உள் ளார்கள். சிலர் பேருக்குமாத்திரம் ஆஸ்திகர்களாகவும், வைதிகர் களாவும் தம்மை வெளியிட்டுக்கொள்வார்கள். ஆனல் செயல்கள் வெவ்வேருயிருக்கும். இருந்தாலும், ஆஸ்திக-வைதிக மதத்தைத் தழுவுவதாக வெளியில் சொல்லிக்கொள்வதற்கு மாத்திரமாவது நாம் ஒருக்கவேண்டியது அவசியமே. "பொய்யே கைம்மை சொல் லிப் புறமே புறமேயாடி மெய்யே பெற்றொழிந்தேன்" என்ற நம்மாழ்வாரருளிச் செயலின்படி புறனுரைக்கும் பேறு தப்பா தென்பது திண்ணம்.

ஆஸ்திகத்வமும் வைதிகத்வமும் வேரூன்றி நிற்பதற்கு இன்றியமையாத சாதனங்கள் நம் முன்ஞேர்கள் திருவாய்மலர்ந் தருளிய பலவகையான நூல்களையும் பரவச்செய்வதேயாம். சிறந்த நோக்கத்துடன் நமது பூருவர்களால் இயற்றப்பட்ட மூலக்ரந்தங்க ளும் வியாக்கியான க்ரந்தங்களும் பெரும்பாலும் அச்சிடப்பட்டிருந் தாலும் அவை அச்சிடப்பெற்று அதிக நாட்கள் ஆய்விட்டபடி யால் அவை இப்போது துர்லபங்களாயிருக்கின்றன. அவற்றை யும் மற்றும் சமயோசிதங்களான நூல்களையும் தமிழ்லிபியிலும் தெலுங்கு லிபியிலும் அச்சிடுவதற்கென்றே சென்னையில் சென்ற 1947-ஷு அக்டோபர் மாதத்தில் "ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபா" என்னும் பெயரால் ஒரு சபை ஏற்படுத்தப்பட்டு மிக வொழுங் கான முறையில் காரியங்கள் நடைபெற்றுவருகின்றன. அந்த சபையின் நிபந்தனைகளும் அந்த சபையின் மூலமாக இதுவரை நடந்திருக்கிற காரியங்களின் அறிக்கையும் இச்சஞ்சிகையிலேயே சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவற்றை ஊன்றி வாசித்து யாவ ரும் அந்த சபையில் மெம்பர்களாகச் சேரவேண்டுமென்பது பிரார்த்தனை.

இப்பத்திரிகையானது அந்த சபையின் சார்பாகவே நடத்த ஆரம்பிக்கப்படுகிறது. இது மாதந்தோறும் வெளிவரும். சில மாதங்கள்வரையில் இது 32 பக்கங்களுக்கு மேற்படாமல் வெளி வந்துலவும். சபையின் அபிவிருத்திக்கு இணங்க இதில் பக்கங்க ளும் நாளடைவில் அபிவிருத்திபெறும். பிறவிக்கடலுள் நின்று

துளங்கும் நாம் உய்வதற்காக நமது முன்னோர்கள் அளவுகடந்த கருணையுடன் நித்யாநுஸந்தேயமாக அருளிச்செய்துள்ள சிறு சிறு திவ்ய க்ரந்தங்களுக்கெல்லாம் எளிய தெளிய உரையை வெளியிடுவதே சிலகாலம்வரையில் இப்பத்திரிகைக்கு முக்கியமான நோக்கமாக இருக்கின்றது. ஸமயோசிதங்களான வியாசங்களும் சில சில வெளிவரக்கூடும்.

ஷை ஸத்க்ரந்த ப்ராகாசந சபையில் மெம்பர்களாகச்சேர்ந்தவர்களுக்கு இப்பத்திரிகை தனிப்பட சந்தாத்தொகை செலுத்த வேண்டாமல் கிடைக்கும். அந்த சபையில் மெம்பர்களாகக் சேராதவர்கள் இப்பத்திரிகைக்குமாத்திரம் சந்தாதாரர்களாகச்சேர விரும்பினால் அவர்கள் வருஷ சந்தா ரூ. 4 செலுத்தவேண்டும்.

மானேஜிங் எடிடர்,

**"ஸ்ரீ ராமாநுஜன்"**

C/o ஸ்ரீ லக்ஷ்மி பிரிண்டிங் ஒர்க்ஸ், தேர் நிலையம், சேலம். என்ற விலாசத்திற்கு இது சம்பந்தமான லெட்டர்கள் எழுதுவதும், பணம் அனுப்புவதும் செய்க. ஸத்க்ரந்த பிரகாசந சபையில் மெம்பர்களாகச் சேரவும், அந்த சபையின் மூலமாகவே இப்பத்திரிகையைப் பெறவும் விருப்பமுடையவர்கள் "ஸத்க்ரந்த ப்ரகாசந சபா செக்ரிடெரி, 8, முல்லா சாஹிப் லேன், ஜி. டி. மதராஸ்" என்ற விலாசத்திற்கும், P. B. அண்ணங்கராசாரியார், காஞ்சீபுரம் என்ற விலாசத்திற்கும் எழுதலாம்.

ஸத்க்ரந்த ப்ரகாசந சபையின் மூலமாக இதுவரை அச்சாகியிருக்கும் தமிழ் நூல்கள்.

1. **பூர்வாசார்ய ப்ரபாவம்:** ஸ்ரீமந்நாத முனிகள் தொடங்கி மணவாளமாமுனிகள்வரைக்குமுள்ள சகல பூர்வாசார்யர்களினுடைய வைபவம் விரிவாக எழுதப்பட்டுள்ளது. விலை ரூ. 1-4-0.

2. **ஆசார்ய ஹ்ருதயஸாரம்** ஆசார்ய ஹ்ருதயமென்பது நமது சம்பிரதாயத்திற்கு மிகச் சிறந்ததோர் அற்புதமான நூல். இதன் ஆழ்பொருள்களை நன்கு அறிவதற்கு இப்புத்தகமே மிகவும் உதவக்கூடியது. விலை ரூ. 4-0-0. இதன்ஸாரடர்ச்சிடிமுடிவில் காணேக

இவையும் ஷை விலாசத்திலேயே கிடைக்கும். பகவத் விஷயம் என்று ப்ரசித்திபெற்ற திருவாய் மொழியீடும் ஷை சபையின் மூலமாக அச்சிடப்பட்டுவருகின்றது.

ஸ்ரீ

# பெரும்பூதூர் மாமுனிவன்

(ஸ்ரீகாஞ்சீ ப்ர. அண்ணங்கராசாரியார்)

சித்திரையில் செய்ய திருவாதிரையில் எழ்பாரும் உய்ய உதித்தருளின எதிராசருடைய பெருமைக் கடலில் ஒரு சிறு திவலை இப்போது அநுபவிப்போம்.

"ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களினும்
வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்!—எழ்பாரு
முய்ய வெதிராச ருதித்தருளும் சித்திரையில்
செய்யதிருவாதிரை"

என்ற மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தியை முந்துற அநுஸந்தித்து, சித்திரையில் திருவாதிரையைச் சிறிது சிந்தனை செய்வோம்.

இந்த நன்னாளின் சிறப்பை நம் மணவாளமாமுனிகள் தாமே ஒரு சீரிய செய்யுளினால் ஆர்த்திப் பிரபந்தத்தில் வெளியிட்டருளியுள்ளார்: அது வருமாறு:—

"சங்கரபாக்கரயாதவபாட்ட ப்ரபாகரர்தங்கள்மதம்
சாய்வுற வாதியர் மாய்குவரென்று சதுமறைவாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலையென்று மிகத்தளர் நாள்
மேதினி நஞ்சுமையாறுமெனத் துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர்வாழ்வு முளைத்திடுநாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலைமற்றுமுவந்திடுநாள்
செங்கயல்வாவிகள்சூழ் வயல்நாளுஞ்சிறந்த பெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரை நாளே"

என்பதாம்.

இப்பாசுரத்தின் தாற்பரியத்தைச் சுருங்க வுரைப்போமிங்கு.

எம்பெருமானார் திருவவதரிப்பதற்கு முன்னே பலபல மாய மதத்தவர்கள் இவ்வுலகில் மலிந்து வேதங்களுக்கு எலாத பொருள்களை எறிட்டுரைத்துத் தத்துவார்த்தங்களை க்ஷோபப்படுத்தியிருந்தார்கள்; அதனால் வேதங்களும் "நமது கதி இப்படியாயிற்றே!" என்று சாலவும் வருந்திக்கிடந்தன. எம்பெருமானார் திருவவதரித்தவன்றே அவற்றின் வருத்தம் தொலைந்து அவை வாழ்ச்சிபெறத் தொடங்கிவிட்டன. "நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது" என்றார் அமுதனாரும்.

அன்றியும், இந்நிலவுலகில் கலிபுருஷன் நெடுநாளாகச் செங்கோல் செலுத்திக்கொண்டு தனது பராக்ரமமே ஓங்கி வருமாறு அரசாட்சி புரிந்துவந்தான்; அன்னவனும் எம்பெருமானார் திருவவதரித்தவன்றே "கலியுங் கேடுங் கண்டு கோண்மின்"! என்ற மூதுவர் மொழி பலிக்குங்காலம் வாய்த்ததுபோலுமென்று துணிந்து இனி நாம் மாள்வதன்றி வாழ்வதற்கில்லையென்று தளர்ச்சி யெய்தத் தொடங்கிவிட்டான். "இறந்தது வெங்கலி" என்றார் அமுதனாரும்.

அன்றியும், பூமிப்பிராட்டியானவள் 'ஸர்வம் ஸஹா' என்று பெயர்பெற்றிருந்தாலும், நல்லார்கள் பலபல கோடிக்கணக்காகத் தன்மீது வாழப்பெற்றாலும் அவர்களைப் பஞ்சுச்சுருள்போல் சிறிதும் ஆயாஸமின்றித் தாங்கி நின்று, தீயவர் ஒருவரிருவர் இருப்பினும் இரும்பு மூட்டை தாங்குவதனால்போல் மிக மெலிந்து நிற்பள். உடையவர் திருவவதாரத்திற்கு முன்னே நல்லவர்கள் மிக மெலிந்து தீயவர்களே மிக மலிந்திருக்கப்பெற்றதனால் பூமிப்பிராட்டி பொறுக்கொணாச் சுமையினால் மிகவும் துயருற்றுக் கிடந்தாள்; அன்னவள் எம்பெருமானார் திருவவதரித்தவன்றே, 'இனி இந்நிலவுலகில் தீயார் ஒருவருமின்றிக்கே அனைவ

னும் நல்லவராகவே வாழ்ச்சி பெறுவார்கள்' என்று சிக்கெனத் துணிந்து இனி நமக்குப் பொறுக்கவொண்ணாத பாரம் சிறிதுமிராதென்று தேறித்துயர்விடத் தொடங்கினள். 'பல்கலையோர் தாம் மன்னவந்த விராமானுசன்' என்றார் அமுதனாரும்.

அன்றியும், பல ஆழ்வார்களும் ஆசாரியர்களும் திருவவதரித்து அருமருந்தன்ன ஸ்ரீஸூக்திகளை உதவியருளியிருந்தாலும், அவற்றுக்கு ஸர்வதோமுகமான ப்ரசாரம் ஏற்படாமலும் அழகிய வியாக்கியானங்கள் அமையாமலுமிருந்ததனால் -'நம்முடைய அரிய பெரிய காரியங்கள் உலகுக்குப் பெரிதும் பயன்படவில்லையே'' என்று அவர்களெல்லாரும் களிப்பின்றியே குன்றியிருந்தனர்; எம்பெருமானார் திருவவதரித்தவன்றே "இனி ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதி க்ரந்தங்கள் ஓங்கி விளங்கப்பெறுமாதலால் நமக்கொரு குறையில்லை; நாம் செய்திருந்த காரியங்களெல்லாம் சத சாகமாகப் பணைக்கும்படியான பாக்கியம் வாய்க்க நற்சமயம் வந்திட்டது'' என்று துணிந்து அன்னவர்கள் அளவிலாத ஆனந்தமெய்தத் தொடங்கினர். "தென் குருகை வள்ளல் வாட்டமிலா வண்டமிழ்மறை வாழ்ந்தது'' என்றார் அமுதனாரும்.

அன்றியும், எம்பெருமான் தான் பரமபதத்தில் பரவாஸுதேவனாக வீற்றிருந்து எழுலகும் தனிக்கோல் செலுத்தியிருக்குமிருப்பிலும், திருப்பாற்கடலில் அடியார்கள் கூக்குரல் செவிப்படுமாறு வெள்ளை வெள்ளத்தின் மேலொருபாம்பை மெத்தையாக விரித்திருந்து அதைவிட்டுப் புறப்பட்டு ராவண கும்பகர்ண கம்ஸ சிசுபாலாதிகளைத் தொலைத்திட்டு உலகை வாழ்விக்க ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்கள் செய்தவற்றிலும், கருதரிய வுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையுமிருப்பிலும் த்ருப்தி பெறாதே கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் முதலான திருப்பதிகளிலே பின்னானார் வணங்குஞ் சோதியாய் ஸந்நிதி பண்ணியிருந்தும், அந்தத் திருப்பதிகளைத் திருத்திப் பணிகொள்வாரில்லாமையாலே அர்ச்சாவதாரமும் பயனற்றதாக ஆய்விட்டதே! என்று வருந்தவேண்டியிருந்தது எம்பெருமானார் திருவவதரிப்பதற்கு முன்னே. இப்பெரியார் இவ்வுலகினிற் போந்தவன்றே—"ஸர்வதேச தசாகாலேஷு அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம். ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸர முஜ்வலா, திகந்த வ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ'' என்று நீடூழியூழி நாடெங்கும் போற்றும்படியாக ஸகல திவ்ய தேசங்களிலும் அற்புதமான சீர்திருத்தங்களும் கைங்கர்ய அபிவிருத்திகளும் இனி ஓளிமல்குமென்று துணிந்து அர்ச்சாவதார எம்பெருமான்கள் குறை தீர்ந்து மகிழத் தொடங்கினர்.

ஆக இங்ஙனம் வேதவேதாந்தங்கள் களிப்புறவும், கலிபுருஷன் தேய்வுறவும், மண்மாது மகிழ்வுறவும், பூருவர்கள் யாவரும் பொலிவுறவும், எம்பெருமான் தானும் இன்புறவும் அமைந்த நன்னாள் சித்திரையில் செய்ய திருவாதிரை யொன்றேயாம்.

இத்திரு நன்னாளிலே தோன்றிய பேராசிரியர் ஆதிசேஷனுடைய அவதாரமென்றும் பஞ்சாயுதாழ்வார்களின் ப்ராதுர்ப்பாவமென்றும் விஷ்வக்ஸேனருடைய அவதாரமென்றும் இங்ஙனம் பலவாறாகப் பெரியோர் பணிப்பர். நூற்றந்தாதியில் "அடையார் கமலத் தலர்மகள் கேழ்வன் கையாழி யென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண் சார்ங்க வில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலம் காப்பதற்கென்றிடையே இராமாநுசமுனியாயின விந்நிலத்தே.'' என்னும் பாசுரத்திலும், "ப்ரதயந் விமதேஷு தீக்ஷ்ணபாவம் ப்ரபுரஸ்மத் பரிரக்ஷணே யதீந்த்ர:, அப்ருதக் ப்ரதிபந்ந யந்மயத்வை: வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே:'' என்ற யதிராஜ ஸப்ததி ஸூக்தியிலும் "எம்பெருமானார் பஞ்சாயுதாழ்வார்களின் அவதாரம் என்னும் விஷயம் காட்டப்பட்டுள்ளது 'விச்வம் த்ராதும் விஷயநியதம் வ்யஞ்ஜிதாநுக்ரஹஸ்ஸந் விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட:'' என்கிற யதிராஜ ஸப்ததி ஸூக்தி யொன்றில் விஷ்வக ஸேனாவதாரமென்னும் விஷயம் கூறப்பட்டுள்ளது.

## பெரும்பூதூர் மாமுனிவன்

திருவனந்தாழ்வானுடைய திருவவதாரமென்னும் விஷயத்தைப் பற்பல ஆசிரியர்கள் பேசியுள்ளார்கள். அதனை சேஷாவதாரச் சிறப்பில் விரியவுரைத்தோம். அங்கே கண்டுகொள்வது. எம்பெருமானாருடைய பூர்ண கடாக்ஷ பாத்ரபூதராய் அவர் திறத்துத் தேவுமற்றறியாதே ஈடுபட்டிருந்த மஹாப்ராஜ்ஞரான கருட வாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரி சரிதமென்னும் மஹா காவ்யத்தில் பதினேழாவது ஸர்க்கத்தில் ஸ்ரீ ராமாநுஜ வைபவம் சொல்லப்புகுந்தவிடத்து "பௌஜங்கம் வபுரபஹாய சேஷபோகீ யத்ரூபம் த்ரிபுவனவந்திதம் ஜகாம" என்று பணித்திருப்பதும், உடையவருடைய அந்தரங்க சிஷ்யர்களில் ஒருவரான வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவ க்ரந்தத்தில் "வேதாந்த ஸித்தாந்த ஸமர்த்தநாய பாஹ்யாந்தரப்ராந்த மதாபநுத்யை, சேஷாம்சக: கேசவயஜ்வ தேவ்யாம் தேஜோநிதி: கச்சிதிஹாவிராஸீத்" என்றுள்ளதும் முக்கியமாக இங்கே அநுஸந்தேயங்கள்.

இராமாநுச நூற்றந்தாதியில் "நல்லார் பரவுமிராமாநுசன்" என்ற எண்பதாம் பாசுரத்தின் வியாக்கியானத்தில்—"அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து தத:பரம், பலபத்ரஸ் த்ருதீயஸ்து கலௌ ராமாநுஜ: ஸ்ம்ருத:" என்கிற ஆர்ஷவசனம் உதாஹ்ருதமாகக் காண்கிறது. இந்த ச்லோகத்தில் "கலௌ கச்சித் பவிஷ்யதி" என்கிற பாடமாகவும் கடையடி காண்கிறது. இப்பாடமே பொருத்தமானதென்பர்.

இப்பேராசிரியருடைய ப்ரபாவ விசேஷங்களைப் பார்க்குமிடத்து, நித்யமுக்தர்களனைவரும் திரண்டு வந்து திருவவதரித்தபடியோ! என்று சங்கிக்கலாயிருக்கும். அபரிச்சேத்ய ப்ரபாவங்கள்மிகுந்த இவ்வாசார்ய சிகாமணி தம்முடைய திருவடி ஸம்பந்தத்தினால் பின்புள்ளாரனைவர்க்கும் உஜ்ஜீவநம் தந்தருளியது போலவே தமது திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசாரியர்களுக்கும் உஜ்ஜீவனம் தந்தருளியதாக அக்காலத்திலிருந்த மஹான்கள் உபச்லோகித்துள்ளார்கள். இதைச் சிலர் அதிசயோக்தியென்றுகொண்டாலும் அங்ஙனம் சிறப்பித்துக் கூறுதற்கு ஏற்ற பெருமேன்மை இப்பெரியார் பக்கல் நிரம்பியிருந்ததென்று கொள்ளத் தட்டில்லையாயிற்று.

எம்பெருமானாருடைய திருமேனியின் தோற்றமே அநுபவ ரஸிகர்களுக்கு தேனும் பாலுமமுதுமாக உள்ளுந்தோறு முள்ளம் தித்திக்கும். "காணிலுமுருப்பொலார்" என்னும்படி யிராநின்ற யதிகளின்படி யன்றியே எம்பெருமானாருடைய பரம விலக்ஷணமான திவ்யமங்கள விக்ரஹ ஸந்நிவேச அமைதியை "காஷாய சோபி கமநீயசிகாநிவேசம் தண்டத்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம், உத்யத்தி நேசநிப முல்லஸதூர்த்வபுண்ட்ரம் ரூபம் தவாஸ்து யதிராஜ! த்ருசோர்மமாக்ரே" என்றும், "உபவீதிந மூர்த்வ புண்ட்ரவந்தம் த்ரிஜகத் புண்யபலம் த்ரிதண்ட ஹஸ்தம், சரணாகதஸார்த்தவாஹமீடே சிகயா சேகரிணம் பதிம் யதீநாம்" என்றும் பூருவர்கள் பரம போக்யமாகப் பேசி யநுபவித்துப் போந்தார்கள்.

இவ்வடிவழகு விஷயமாக இன்சுவையே வடிவெடுத்ததென்னலாம்படி எம்பார் அருளியுள்ள பாசுரம்,

"பற்பமெனத்திகழ் பைங்கழலுன்றன் பல்லவமேவிரலும்
  பாவனமாகிய பைந்துவராடை பதிந்தமருங்கழகும்
முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல்தன்னழகும்
  முன்னவர்தந்திடு மொழிகள் நிறைந்திடு முறுவல்நிலாவழகும்
கற்பகமேவிழி கருணைபொழிந்திடு கமலக்கண்ணழகும்
  காரிசுதன்கழல் சூடியமுடியும் கனநற்சிகைமுடியும்
எப்பொழுதும் எதிராசன்வடிவழ கென்னிதயத்துளதால்
  இல்லையெனக்கெதி ரில்லையெனக்கெதி ரில்லையெனக்கெதிரே"

என்பதாம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# ஸத்-க்ரந்த-ப்ரகாசன ஸபா, மதருஸ்.

## நிபந்தனைகள். (ரூல்ஸ்)

1. **பெயர்.** இந்த ஸபையின் பெயர் "ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா, மதருஸ்" என்றிருக்கவேண்டும்.

2. **இடம்.** தற்காலம் ஸபையின் காரியம் நடக்கும் இடம் 8, முல்லா ஸாஹெப் லேன், G. T. மதருஸ்.

3. **ஸபையின் நோக்கம்.** ஸபையின் நோக்கங்கள் வருமாறு—;

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு உபகாரகமான எல்லா க்ரந்தங்களையும், தமிழ், தெலுங்கு லிபிகளில் அச்சிட்டு வெளியிடுவதற்கென்றே இந்த ஸபை அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த க்ரந்தங்களாவன—

(a) ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்கள், அவற்றுக்கு நம் பூர்வாசாரியர்களியற்றிய வியாக்கியானங்கள்.

(b) ஆளவந்தார், ஸ்ரீ ராமாநுஜர், கூரத்தாழ்வான், பட்டர், நம்பிள்ளை, நடாதூர் அம்மாள், ச்ருதப்ரகாசிகாபட்டர், பிள்ளைலோகாசார்யர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் முதலிய நம் பூர்வாசார்யர்கள் ஸம்ஸ்க்ருத பாஷையிலும் தமிழ்ப் பாஷையிலும் ஸாதித்த இதர க்ரந்தங்கள்,

(c) ஷை க்ரந்தங்களுக்கு வியாக்கியானமாகவும், ஸங்கிரஹமாகவும், ப்ரக்ருத காலாநுகுணமாக நவீன பண்டிதர்கள் எழுதும் நூல்கள்.

(d) முக்கியமான இதிஹாஸ புராணங்கள்,

(e) முன்னோர்கள் மிகவும் கம்பீரமான நடையில் செய்த மூலக்ரந்தங்களை வாசித்து லாபமடைய அவகாசமும் சக்தியுமற்ற ஸாதாரண அறிவுள்ள ஜனங்களுக்கு உபயோகமாகும்படி ஷை க்ரந்தங்களிலிருந்து சுருக்கி எடுத்து, எழுதப்படும் அவசியமான உரையுடன் கூடிய பாகங்கள்.

(f) மேற் கூறியவைகளில் முக்கியமான (a), (b), (d) வகுப்புகளில் இதுவரையில் அச்சாகாத, அச்சாகியும் தற்சமயம் கிடைக்காத க்ரந்தங்கள்,

(g) 10 ஜீவியச்சந்தாதார்களும், 100 வருஷச்சந்தாதார்களும் விரும்பும் பக்ஷத்தில் மேற் கூறியவைகளில் சேர்ந்த ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களை தேவநாகரலிபியில் அச்சிடுவது.

(h) இதற்கு அநுகுணமாக ஸமயோசிதமான எல்லாக்கார்யங்களையும் செய்வது.

4. **ஸபிகர்கள்.** இச்சபைக்கு நான்கு விதமான ஸபிகர்கள் இருத்தல் வேண்டும்; (1) சக்ரவர்த்தி போஷகர்கள், (2) போஷகர்கள், (3) ஸஹாயகர்கள், (4) சந்தாதாரர்கள்.

(a) **சக்ரவர்த்தி போஷகர்கள்.** ரூ. 500/-க்குக் குறையாமல் உதவிபுரியுமவர்களுக்கு சக்ரவர்த்தி போஷகரென்று பெயர். பெரிய உதவியைப் புரிந்து ஸபையில் சேர விரும்பும் மடாதிபதிகள், மஹாராஜாக்கள் முதலியவர் இவ்வகுப்பில் சேருவார்கள்.

(b) **போஷகர்கள்.** ரூ. 250/-க்குக் குறையாமல் உதவிபுரியுமவர்கள் போஷகர்கள். அவர்கள் ஆயுள் வரையில் வேறு பணம் செலுத்தவேண்டியதில்லை. அவர்கள் ஸபையில் அச்சிட்டு வெளிப்படுத்தும் புஸ்தகங்கள் ஒவ்வொன்றிலும், (அவர்கள் விருப்பப்படி தமிழ், அல்லது தெலுங்கு லிபியில்) மூன்று ப்ரதிகள் இனமாகப் பெற உரிமையுடையவர்கள்.

(c) **ஸஹாயகர்கள்.** 100/- ரூபாயை ஒரே தடவையாகவோ, அல்லது நான்கு மும்மாதத் தவணைகளாகவோ (1947 அக்டோபர்மீ தொடங்கி) உதவிபுரியுமவர்கள் ஸஹாயகரெனப்படுவர். இவர்கள் ஸபை வெளியிடும் ஒவ்வொரு புஸ்தகத்திலும் (தெலுங்கு அல்லது தமிழ் லிபியில்) ஒரு ப்ரதி இனமாகப் பெறக்கடவர்கள்.

(d) **சந்தாதாரர்கள்.** வருஷத்திற்கு ரூ. 12 வீதம் முன் பணமாக (1947 அக்டோபர் முதலாக) செலுத்துமவர்கள் சந்தாதாரர்கள். இவர்கள் ஸபிகர்களாக இருக்கும் வரையில் ஸபை வெளியிடும் புஸ்தகங்களில் ஒவ்வொரு பிரதியை (தமிழ் அல்லது தெலுங்கு லிபியில்) பெறக்கடவர்கள்.

[ஆக 31—12—47-க்குள் சேரக்கூடிய சந்தாதாரர்களின் எண்ணிக்கையை கவனித்து அதற்குத் தகுந்த பிரதிகளைத் தான் ஒவ்வொரு புஸ்தகத்திலும் அச்சிடவேண்டியதாகிறது.]

5. **கார்ய நிர்வாஹம்.** ஸபையின் கார்யங்கள், பொது ஸபையாரால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு தலைவர், உபத்தலைவர்கள்2, கார்யதரிசி 1, உப-கார்யதரிசி, தனத்யக்ஷர், 20-க்கு மேற்படாத அங்கத்தினர், இவர்களைக் கொண்ட ஒரு கார்ய நிர்வாஹக ஸபையின் மூலமாக நடக்கவேண்டும்.

6. இந்த ஸபை, மூன்று மாதத்திற்கொரு முறையாவது கூடவேண்டும். இந்த ஸபை கூடும் விஷயத்தை அங்கத்தினர்க்கு ஒரு வாரம் முன்னதாகத் தெரிவிக்கவேண்டும். இச்சபைக்கு கோரம் 9.

7. பொது ஸபை வருஷத்திற்கொரு முறை கூடி கார்யஸபை ஒப்பித்த வருஷாந்த ரிபோர்ட்டை அங்கீகரித்து, புது அங்கத்தினரைத் தேர்ந்தெடுத்து, ஸபையின் முன்னேற்றத்திற்கு அவசியமான தீர்மானங்களையும் செய்யவேண்டும். இச்சபை கூடும் விஷயத்தை ஸபிகர்களுக்கு 15 நாள் முன்னதாகத் தெரிவிக்கவேண்டும். இதற்கு கோரம் ஸபிகர்களின் தொகையில் நாலிலொன்று. (இது 20-க்குக் குறையக் கூடாது.)

8. கார்யதரிசி அல்லது கார்யதரிசிகள் ஸபை வெளியிட்ட புஸ்தகங்கள் முதலிய எல்லாவற்றையும் பாதுகாத்து அவற்றை ஸபிகர்களுக்கு அளிப்பது, விற்பனை செய்வது முதலியவற்றுக்குப் பொறுப்பாளிகளாய் தகுந்த கணக்குகளை எழுதிவைக்கவேண்டும்.

9. தனத்யக்ஷர் இண்டியன் பாங்கில் ஒரு கணக்கு வைத்து ஸபைக்கு வரும் பணத்தையெல்லாம் அதில் சேர்க்கவேண்டும். இக்கணக்கை கார்யதரிசி, தனத்யக்ஷர் ஆகிய இருவரும் சேர்ந்தே நடத்தவேண்டும். கணக்குகளை வருஷந் தோறும், ரிஜிஸ்டர்ட் ஆடிட்டர் ஒருவரால் (அவருக்கு பீஸ் தந்தோ, தாரமலோ) பரிசீலிக்கச் செய்யவேண்டும்.

10. **புஸ்தகங்களை அச்சிட்டு வெளியிடும் நியமங்கள்.** (a) அந்தந்த ஸமயத்தில் அச்சிடவேண்டிய க்ரந்தம் யாதென்பதையும், அதற்குரிய லிபியையும், இத்தனை ப்ரதிகள் அச்சிடவேண்டுமென்பதையும் கார்ய சபையார் நிர்ணயிப்பது.

(b) இச்சபை ஸ்ரீமான். P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளின் ப்ரோத்ஸாஹனத்தின் பேரில் அவரதுமேல்பார்வையில் ஏற்படுத்தப்பட்டிருப்பதாலும், அவர் தமது ஆயுளையே இவ்விதமான கார்யங்களில் உபயோகித்து நல்ல அனுபவம் பெற்றிருப்பதாலும், அவர் இச்சபையின் தலைவராகவோ, வேறு விதமாகவோ இதில் ஸம்பந்தம் பெற்றிருக்கும் வரையில் மேலே 10-Aல் கூறப்பட்ட அதிகாரங்களை அவரே வஹிப்பது.

(c) இரண்டு மாதத்திற்கொரு புஸ்தகமாவது வெளியாகவேண்டும். ஒரு வருஷத்தில் தமிழ், தெலுங்கு ஆகிய ஒவ்வொரு லிபியிலும், பெரிய அளவில் 600 பக்கங்கள், அல்லது சிறிய அளவில் 1200 பக்கங்களுக்குக் குறையாமல் புஸ்தகங்கள் வெளியாகவேண்டும். காலம் அனுகூலித்த பிறகு இத்தொகை அதிகமாகவும் வேணும்.

(d) ஒன்றிரண்டு மாதங்களில் வெளியிட முடியாத பெரிய க்ரந்தங்கள் அச்சாகி வந்தால் அப்புத்தகங்களை மாதந்தோறும் அல்லது இரண்டு மாதங்களுக்கொருமுறை பகுதி பகுதியாக வெளியிடலாம். ஏனென்றால், ஸபை வேலை செய்யவில்லையென்று ஸபிகர்கள் நினைக்க இடம் ஏற்படக் கூடாது. ஆனால் புஸ்தகம் முடிவதற்கு முன்பு அதை ஸபிகரல்லாதவர்களுக்கு (பகுதிகளாக) விற்பனை செய்யக் கூடாது.

11. **பொது நியமங்கள்.** வேறு யாராவது மேல் (2) வது பாராவில் கண்டபடி உபயுக்தமான க்ரந்தங்களை அச்சிட வாரம்பித்து ஸபையின் ஸஹாயத்தையபேக்ஷித்தால், அவர்களுக்கு உசிதப்படி ஆதரவு கொடுத்து பதிலாக அப்பதிப்பில் ஸபைக்கு வேண்டிய பிரதிகளை வாங்கிக் கொள்ளலாம்; எப்படியாவது அவசியமான புஸ்தகங்கள் வெளிவந்து லோகோபகாரமாக வேண்டுமென்பதே ஸபையின் நோக்கமாகையால்.

12. வெளியூரிலிருக்கும் ஸபிகர்கள் எல்லோரும் தங்களுக்கனுப்பப்படும் புஸ்தகங்களின் போஸ்டேஜ், ரிஜிஸ்டர் செலவுகளைத் தாங்களே வஹிக்கவேண்டும்.

13. சந்தாதாரர்களுக்கு ரூ. 12 விலையுள்ள புஸ்தகங்களைக் கொடுத்த பிறகே அடுத்த வருடச் சந்தாவை அவர்களிடம் வசூலிக்கவேண்டும்.

14. ஸபிகர்களால் சாசுவதமாக அல்லது வருடச் சந்தாவாகக் கிடைக்கும் தொகையையும், புஸ்தக விற்பனையால் கிடைக்கும் தொகையையும் கொண்டே ஸபையின் செலவுகள் நடக்கவேண்டும். இதற்காகக் கடன் வாங்கக்கூடாது. ஆகையால் மேன்மேலும் ஸபிகர்களின் தொகையை வளர்ப்பதுவே ஒவ்வொருவரின் கடமையாகும்.

15. ஸபையின் கார்யங்களையும், வரவு செலவுகளையும், அச்சிட்ட புஸ்தகங்களின் விவரங்களையும், எல்லா வகுப்பைச் சேர்ந்த ஸபிகர்களின் பெயரையும் கொண்ட ரிபோர்ட் ஆறு மாதங்களுக் கொருமுறை அச்சிடப்படவேண்டும்.

16. ஸபையின் கார்யங்களை ஒழுங்காக நடத்துவதற்கு அவசியமான பை-லாக்களையும், தீர்மானங்களையும் கார்ய நிர்வாஹக ஸபை கூடி ஏற்படுத்தலாம்.

17 ஸபையின் ஒவ்வொரு கூட்டத்திலும் நடக்கும் நடவடிக்கையையும், தீர்மானங்களையும் ஒருங்கே ஒரு புத்தகத்தில் எழுதி, கூடியிருந்த ஸபிகர்களின் கையெழுத்து வாங்க வேண்டியது.

18. அவசியமான ஸமயங்களில் இச்சபையின் நியமங்களை மாற்றுவது, புதிய நியமங்களைச் சேர்ப்பது முதலியவற்றைச் செய்ய பொதுஸபைக்கு அதிகாரமுண்டு. மேலும்

கார்ய நிர்வாஹக சபையார் செய்த மாறுதல்களும் பொது சபையால் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

19. ஸபை ஆரம்பித்த மூன்று மாதத்திற்குள், அல்லது கார்ய நிர்வாஹக சபையின் அபிப்ராயப்படி கூடிய சீக்கிரத்தில் சபையை ஸர்க்காரில் ரிஜிஸ்டர் செய்ய வேண்டியது.

---

26–10–47 தேதியன்று கூடின மூன்றாவது மீட்டிங்கில் இந்த நிபந்தனைகள் (ரூல்ஸ்) ஸர்வஸம்மதமாக அங்கீகரிக்கப்பட்டன. இனிமேல் இந்த ஸபையின் காரியங்கள் ஒழுங்காக நடந்துவரும். அச்சுவேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஊற்றமுள்ளவர்கள் சீக்கிரமாகவே இந்த ஸபையில் மெம்பர்களாகச் சேரும்படி கோரப்படுகிறது.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீவான மாமலை மடாதிபதி ஜீயர் ஸ்வாமிகளும், ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமத் திருக்குறுங்குடி மடாதிபதி ஜீயர் ஸ்வாமிகளும் இந்த ஸபையை ஆதரித்து அபிமானிக்கத் திருவுள்ளம் பற்றி அருளிய ஸ்ரீ முகங்கள் ஸபையாரால் சிரஸா வஹிக்கப் பட்டன. இப்படி பல பெரியார்களுடைய ஆதரவுகள் எதிர்பார்க்கப்படுகின்றன.

ஏற்கெனவே பேட்ரனுகச் சேர்ந்திருப்பவர்கள் 6 பேர்கள். ஸ்ரீமான் உவே. ராவ் ஸாஹெப். S. ரங்கஸாமி ஐயங்கார் (தற்கால உத்யோக ஸ்தானம்—நெல்லூர்.) இந்த ஸ்வாமி 7-வது பேட்ரனுகச் சேர்ந்திருக்கிறுர். மற்ற விஷயங்கள் அடுத்த ரிபோர்ட்டில் வெளிவரும்.

இப்படிக்கு,

G. முஸலப்ப ரெட்டியார், அட்வகேட்.

டெபுடி ஸபா ஸெக்ரிடெரி, 8. முல்லாஸாஹிப் லேன், G.T.

ஸ்ரீ ஸுதர்ஸன பிரஸ், கஞ்சி, Q.H.Ct. 36 C. 400—15–11–47.

ஸ்ரீரஸ்து.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# நித்யாநுஸந்தேய ஸ்தோத்ரமாலா.

**கோயில் திருமலை பெருமாள்கோயில் என்கிற மூன்று திவ்ய தேசங்களிலும் ஈடுபாடுள்ளவர்கள் நாடோறும் காலை மாலைகளில் அநுஸந்திக்க வேண்டியதாக நம் பூருவாசாரியர்களால் பணிக்கப்பட்ட சில திவ்யஸ்துதிகள் உரையுடன்.**

உரையாசிரியர்: ஸ்ரீகாஞ்சீ.ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர்.

# ஸ்ரீரங்கநாதஸ்தோத்ரம்.

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

**பட்டர் தனியன்.**

ஸ்ரீபராசரபட்டார்ய: ஸ்ரீரங்கேசபுரோஹித:
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸ்து பூயஸே.

## உரையவதாரிகை.

கூரத்தாழ்வான் க்ரிமிகண்ட சோழனுடைய உபப்லவத்தினுல் திருவரங்கம் பெரிய கோயிலில் வாழகில்லாமல் பல ஸம்வத்ஸரங்கள் திருமாலிருஞ்சோலையில் ஏகாந்தவாஸஞ் செய்ததுபோலவே அவருடைய திருக்குமாரரான பட்டரும் ஒருகால் ஸ்ரீரங்கவாஸத்தை யிழந்து திருக்கோட்டியூரில் சில வருஷங்கள் எழுந்தருளியிருக்க நேர்ந்தது. திருவாய்மொழியில் (3—2.) * முந்நீர் ஞாலம் படைத்த வென்கிற திருவாய்மொழியின் ஈடுமுப்பத்தாறுயிரப்படி ப்ரவேசத் தொடக்கத்தில்—"பட்டர் திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருக்கச்செய்தே" என்றருளிச் செய்திருப்பதும் இங்கு அநுஸந்தேயம். அப்படி கோயில் வாஸத்தை யிழந்து திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளவேண்டிய காரணம் யாதென்னில்;

பட்டர் திருவரங்கம் பெரியகோயிலில் எம்பெருமானுருடைய ஸ்தானத்திலே வீற்றிருந்து தர்சந நிர்வாஹகராயிருக்கும் நாளிலே அவ்விடத்து ஸப்த ப்ராகாரங்களுள் ஆறுவது

பிராகாரமான திருவிக்கிரமன் திருவீதித் திருமதிள் மிகவும் ஜீர்ணமாய்ச் சரிந்துவிழ, அதனைச் சீர்படுத்திக் கட்டுவிக்கத் தொடங்கிய வீரஸுந்தரப்ரஹ்மராயன் இந்தமதிலின் நேர்மைக்கு மாறாக [கூரத்தாழ்வானுடைய ப்ரிய சிஷ்யரான] பிள்ளைப்பிள்ளை யாழ்வானுடைய திருமாளிகை குறுக்கிட்டிருப்பதுகண்டு முன்போல மதிலை ஒதுக்கிக் கட்டாமல் அத் திருமாளிகையை யிடித்து நேரொழுங்காகத் திருமதிள் கட்டுவிக்க முயன்றான். அதனையறிந்த பட்டர் அவ்வரசனை நோக்கி 'நீ கட்டுவிக்கிற திருமதிளோ பெருமாளுக்குரக்ஷகம் ? பரமபாகவதரான பிள்ளைப்பிள்ளை யாழ்வான் மஹாநுபாவராதலால் அவருடைய மங்களாசாஸநமன்றோ நம்பெருமாளுக்குப் பாதுகாப்பு; முன்பு திருமங்கையாழ்வார் நான்காவது பிராகாரம் கட்டுவிக்கிறபோது தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை சேர்க்கிற இடமாகிய அடந்தை நடந்தை யென்னும் பூஞ்சோலை நேர்பட, அவற்றையழித்துக் குறுக்கி மதில் கட்ட மனங்கொள்ளாமல் ஒதுக்கி மதிள்கட்டவில்லையா ? அதுபோலவே இப்பொழுதும் பிள்ளைப்பிள்ளை யாழ்வானுடைய திருமாளிகையை விட்டு ஒதுங்கத் திருமதிள் கட்டுவிப்பதே தகுதி' யென்று நல்லறிவு கூறினர். அதுகேளாமல் வீரசுந்தரன் 'மஹானென இவ்வாசிரியர் இங்ஙனம் நியமிக்கிறாரே' என்று கௌரவங் கொள்ளாமல், தான் ஆழ்வான் திருவடிகளை ஆச்ரயித்தவனாயிருந்தும் ஆசார்யபுத்திரருடைய நியமனமன்றோ வென்றும் கணிசியாமல் பட்டர்வார்த்தையை உபேக்ஷித்துப் பிள்ளைப்பிள்ளை யாழ்வானது திருமாளிகையை யிடித்துத் தள்ளி நேர்படத் திருமதிள் கட்டுவித்தான். இதுகாரணமாகப் பட்டர்க்கும் அவ்வரசனுக்கும் உண்டான மநஸ்தாபம் நாளடைவிலே மேலிட, வீரசுந்தரன் பட்டரை ஸ்ரீரங்கத்தில் வாழவொட்டாது மிகவும் உபத்ரவிக்க, பட்டர் யாரோடுஞ் சொல்லாது கோயிலினின்று புறப்பட்டுத் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளலானார். அப்போது திருவரங்கத்தையும் நம்பெருமாளையும் விட்டுப்பிரிய நேர்ந்ததைக் குறித்து மிகவும் நொந்து * திடர்விளங்கு கரைப் பொன்னி நடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் கடல்விளங்கு கருமேனி யம்மான் தன்னைக் கண்ணாரக் கண்டுகக்குங் காதல் கிளர்ந்து, முன்பு குலசேகராழ்வார் * திருவரங்கப்பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளுங் கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என் கண்ணிணைகளென்றுகொலோ களிக்கும் நாளே*என்றும், * களிமலர் சேர்பொழிலரங்கத்து உரகமேறிக் கண்வளருங் கடல்வண்ணர் கமலக் கண்ணும் ஒளிமதிசேர் திருமுகமுங் கண்டுகொண்டு என்னுள்ளமிகவென்று கொலோ வுருகு நாளே * 'என்றும் * மாயோனைக் கண்டென்கண்கள் நீர்மல்க வென்று கொலோ நிற்குநாளே * என்றும் அரற்றினாற்போல, ஸ்வாமிபட்டர் தாமும் அரற்றினது சில ச்லோகங்களாக வழிந்து புறப்பட்டது. அந்த ச்லோகங்களே ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரமென்பதாம்.

ஸ்தோத்ராரம்பம்.

सप्तप्राकारमध्ये सरसिजमुकुलोद्भासमाने विमाने कावेरीमध्यदेशे मृदुतरफणिराड्भोगपर्यङ्कभागे ।
निद्रामुद्राभिरामं कटिनिकटशिर:पार्श्वविन्यस्तहस्तं पद्माधात्रीकराभ्यां परिचितचरणं रङ्गराजं भजेऽहम् ॥१

ஸப்தப்ராகாரமத்யே ஸரஸிஜமுகுளோத்பாஸமானே விமானே
காவேரீமத்யதேசே ம்ருதுதரபணிராட்போகபர்யங்கபாகே,
நித்ராமுத்ராபிராமம் கடிநிகடசிர:பார்ச்வவிந்யஸ்தஹஸ்தம்
பத்மாதாத்ரீகராப்யாம் பரிசிதசரணம் ரங்கராஜம் பஜேஹம். (1)

| | | | |
|---|---|---|---|
| காவேரீ மத்ய தேசே | உபய காவேரீமத்யத்திலே யுள்ள தென்திருவரங்கத்திலே | நித்ரா முத்ரா அபிராமம் | திருக்கண் வளர்ந்தருளுகிற பாவனையினால் அழகுபொலிந்தவரும் |
| ஸப்த ப்ராகார மத்யே | ஏழுதிருமதில்களினுள்ளே | கடிநிகட சிர: பார்ச்வ விந்யஸ்த ஹஸ்தம் | திருவரையருகில் ஒரு திருக்கையும் திருமுடியருகில் மற்றொரு திருக்கையும் வைத்திருப்பவரும் |
| ஸரஸிஜ முகுள உத்பாஸமானே விமானே | தாமரை முகுளம் போல்விளங்குகின்ற ப்ரணவாகார ஸ்ரீரங்கவிமானத்திலே | பத்மா தாத்ரீ கராப்யாம் பரிசித சரணம் | திருமகளும் மண்மகளும் தமது திருக்கைகளினால் திருவடி வருடப்பெற்றவருமான |
| ம்ருதுதர பணிராட் போக பர்யங்க பாகே | பரமஸுகுமாரமான திருவனந்தாழ்வான் திருமேனியாகிற திருப்பள்ளி மெத்தையிலே | ரங்கராஜம் அஹம் பஜே | ஸ்ரீரங்கநாதரை நான் ஸேவிக்கின்றேன். |

* கங்கையிற் புனிதமாய காவிரி நடுவுபாட்டில் பொன்மதிளேழுடுத்த ஸ்ரீரங்கவிமானத்தில் அரவரசப் பெருஞ்சோதி யனந்தனென்னு மணிவிளங்கு முயர் வெள்ளையணையை மேவிச் சீர்பூத்த செழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கும் நீர்பூத்த திருமகளும் நிலமகளு மடிவருடப் பள்ளிகொள்ளும் பரமனைத் தாம் இடைவீடின்றிப் பாவனைசெய்யும்பரிசை இதனால் அருளிச்செய்தாராயிற்று. **[ஸப்தப்ராகாரமத்யே]**"மாடமாளிகை சூழ் திருவீதியும் மன்னு சேர் திரிவிக்ரமன் வீதியும், ஆடல்மாறனகளங்கன் வீதியும் ஆலிநாடனமர்ந்துறை வீதியும், கூடல்வாழ் குலசேகரன் வீதியும் குலவுராச மகேந்திரன் வீதியும், தேடுதன்மவன்மாவன் வீதியும் தென்னரங்கர் திருவாவரணமே." என்ற செய்யுளை இங்கு அநுஸந்திக்க.

**[நித்ரா முத்ராபிராமம்.]** * உறங்குவான்போல் யோகுசெய்த பெருமான் * என்று நம்மாழ்வாரும், * ஒரு பாம்பை மெத்தையாக விரித்து அதன்மேலே கள்ளநித்திரை கொள்கின்ற * என்று பெரியாழ்வாரு மருளிச்செய்தவை காண்க. **[கடிநிகட சிர:பார்ச்வ விந்யஸ்த ஹஸ்தம்]** ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * **கிரீடம் ஸ்ரீரங்கேசயிது :** * (110) என்று தொடங்கி யருளிச் செய்யப்பட்ட ச்லோகம் இங்கு அநுஸந்தேயம். அதன் கருத்தாவது-தலையணையாக அமைத்துக் கொள்ளப்பட்டவொரு திருக்கையானது திருவபிஷேகத்தைத் தொட்டுக் கொண்டிருக்குமிருப்பினாலே 'ப்ரஹ்மருத்ரர்களுக்கும் தலைவரான பெரியபெருமாளொருவர்க்கே இத்திருவபிஷேகம் பொருந்தும்' என்று தெரிவிக்கின்றதுபோலும். இனி, திருமுழந்தாளளவும் நீட்டிவைக்கப்பட்டிருக்கின்ற மற்றொரு இடத்திருக்கையானது திருவடியைத் தொட்டுக்கொண்டிருக்கு மிருப்பினாலே 'இத்திருவடியிணையே தாழ்ந்தார்க்குத் தக்க புகலிடம்' என்று தெரிவிக்கின்றதுபோலும் என்பதாம். வலத்திருக்கையானது பரத்வத்தையும் இடத்திருக்கையானது ஸௌலப்யத்தையும் கோட்சொல்லித் தருகின்றது என்றவாறு.

**[பத்மா தாத்ரீ கராப்யாம் பரிசித சரணம்]** * வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க நீ யொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே * என்ற அபிஸந்தி விசேஷத்தினால் இந்த விசேஷணமிட்டருளினபடி. ... (1)

कस्तूरीकलितोर्ध्वपुण्ड्रतिलकं कर्णान्तलोलेक्षणं मुग्धस्मेरमनोहराधरदलं मुक्ताकिरीटोज्ज्वलम् ।
पश्यन्मानसपश्यतोहररुचः पर्यायपङ्केरुहं श्रीरङ्गाधिपतेः कदा नु वदनं सेवेय भूयोऽप्यहम् ॥ ॥ २ ॥

**கஸ்தூரீகலிதோர்த்வபுண்ட்ரதிலகம் கர்ணாந்தலோலேக்ஷணம்**
**முக்தஸ்மேரமனோஹராதரதளம் முக்தாகிரீடோஜ்ஜ்வலம்,**
**பச்யந்மாநஸபச்யதோஹரருச: பர்யாயபங்கேருஹம்**
**ஸ்ரீரங்காதிபதே: கதா நு வதநம் ஸேவேய பூயோப்யஹம்.** (2)

| | | | |
|---|---|---|---|
| பச்யத் மாநஸபச்ய தோஹர ருச: ஸ்ரீரங்காதிபதே: | கண்டார்நெஞ்சைக் கவருமழகு வாய்ந்த ஸ்ரீரங்கநாதருடைய, | முக்த ஸ்மேரமனோஹர அதரதளம் | வ்யாமோஹமே வடிவெடுத்துப் புன்முறுவல் செய்து கொண்டு மனோஹரமாயிருக்கின்ற திருவதரத்தையுடையதும் |
| கஸ்தூரீகலித ஊர்த்வபுண்ட்ர திலகம் | கஸ்தூரிக் காப்பினாலமைந்த திவ்யோர்த்வபுண்ட்ர திலகமுடையதும் | முக்தாகிரீட உஜ்ஜ்வலம் | முத்துக் கிரீடத்தினால் ஒளி பெற்று விளங்குவதும் |
| | | பர்யாய பங்கேருஹம் | தாமரையே யென்னலாம்படியுள்ளதுமான |
| கர்ணாந்த லோல ஈக்ஷணம் | திருச்செவியளவும் சுழலமிடாநின்றதிருக்கண்களையுடையதும் | வதநம் | திருமுக மண்டலத்தை |
| | | அஹம் | அடியேன் |
| | | பூய: அபி | மறுபடியும் |
| | | கதா நு ஸேவேய | என்று ஸேவிப்பேன் ? |

இதுமுதல் நான்கு ச்லோகங்களினால்—ஸ்ரீரங்கநாத விச்லேஷத்தினாலும் ஸ்ரீரங்க க்ஷேத்ர விச்லேஷத்தினாலும் தமக்குண்டான ஆற்றாமையை வெளியிட்டுக்கொண்டு, ‘அந்தோ! என்விடாய் தீருவது என்றைக்கு? அப்படியுமொருநாள் வாய்க்கப்பெறுமோ?’ என்று புலம்புகின்றார். * களிமலர்சேர் பொழிலரங்கத்து உரகமேறிக் கண்வளரும் கடல் வண்ணர் கமலக் கண்ணும், ஒளிமதிசேர் திருமுகமுங்கண்டுகொண்டு என்னுள்ளமிக வென்று கொலோ வுருகுநாளே * என்ற குலசேகராழ்வார் பாசுரத்தின் சாயலாக அமைந்தது இந்த ச்லோகம். கஸ்தூரிக் காப்புத் திருமண்காப்பு விளங்கப்பெற்றதும், காதளவும் நீண்டு கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய திருக்கண்களை யுடையதும், அபிமதஜந தர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்தமதுர மந்தஹாஸ விலாஸம் விளங்க நின்ற திருவதரத்தை யுடையதும் முத்துக்கொண்டை யணிந்து திகழ்வதும் தாமரைப் பூப்போன்றதுமான என்னப்பனது திருமுகமண்டலத்தை இப்பிறப்பிலே மீண்டுமொருகால் ஸேவிக்கப் பெறுவேனோ? பாவியேனுக்கு அந்தப் பாக்கியம் வாய்க்குமோ? என்றாராயிற்று.

“**பச்யந்மாநஸபச்யதோஹரருசிம்**” என்ற சிலருடைய பாடம் தவறானதென்று மறுக்கத் தக்கது. நபும்ஸகலிங்கமான **வதந** சப்தத்திலே விசேஷணமாக அந்வயிக்கமாட்டாதாகையாலே. அநுஸ்வாரமின்றிக்கே (ருசி) என்றிருந்ததாகில் ஒக்கும்; அப்போது சந்தோபங்கமாகும். ஆகவே “பச்யதோஹரருச:” என்ற ப்ராசீந பாடமே கொள்ளத் தக்கது. இது ஸ்ரீரங்காதிபதிக்கு விசேஷணம். [ஷஷ்டீவிபக்தி.]

நாச்சியார் திருமொழியில் (10—5.) * நல்லார்கள் வாழும் நளிரரங்கநாகணையான் * என்றவிடத்து வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளை இரண்டு ஐதிஹ்யங்களருளிச் செய்கிறார்; அவை இவ்விடத்திலநுஸந்திக்கவுரியவை. (அவையாவன—) (1) பட்டர் முதுகில் புண்ணாலே நொந்திருக்கச் செய்தே பெருமாள் அருள்பாடிட்டு ‘வாராய்! அஞ்சினாயோ? என்று கேட்டருள, ‘நாயன்தே! எனக்குச் செய்து தந்தருளாத தரமில்லை;

இங்கே யிருக்கச் செய்தேயும் பரமபதம் என் சிறுமுறிப்படி செல்லும்படி பண்ணியருளிற்று. அதிலொரு குறையுமில்லை. இங்கே குளிர்ந்த திருமுகத்தையும் திருநாமத் தழும்பையும் முறவலையும் இழக்கவென்றால் அடியேன் அஞ்சமாட்டேனோ?' என்றாராம். (2) ஆளவந்தார்மகனார் சொட்டைநம்பி ஓராளவிலே திருக்கோட்டியூர் நம்பியை நெகிழ ஒருவார்த்தை சொன்னாராய் 'நீ கடக்க வர்த்தி' என்று ஆளவந்தார் அருளிச்செய்ய; அவரும் படைவீட்டிலே ராஜஸேவை பண்ணித் திரிந்தாராய், பின்பு இவருடைய சரம ஸமயத்திலே இவருடைய அத்யவஸாய மறியவேணுமென்று 'நீ நினைத்துக் கிடக்கிறதென்?' என்று கேட்டார்களாய் 'ஆளவந்தார் ஸ்ரீபாதத்தின் ஸம்பந்தம் பரமபத ப்ராப்தி பண்ணித் தந்தல்லது விடாது; அங்கேபோனால் ஸ்ரீவைகுண்ட நாதன்முகம் நம்பெருமாள் திருமுகமண்டலம் போலே குளிர்ந்திருந்ததில்லையாகில் முறிச்சுக்கொண்டு வருவதாக நினைத்திருந்தேன்' என்றாராம். ... ... ... ... (2)

कदाऽहं कावेरीतटपरिसरे रङ्गनगरे शयानं भोगीन्द्रे शतमखमणिश्यामलरुचिम् ।
उपासीनः क्रोशन् मधुमथन ! नारायण हरे मुरारे गोविन्देत्यनिशमपनेष्यामि दिवसान् ॥ ॥ ३ ॥

கதாஹம் காவேரீதடபரிஸரே ரங்கநகரே
சயாநம் போகீந்த்ரே சதமகமணிச்யாமலருசிம்,
உபாஸீந: க்ரோசந் மதுமதந நாராயண ஹரே
முராரே கோவிந்தேத்யநிசமபநேஷ்யாமி திவஸாந். (3)

| | | | |
|---|---|---|---|
| காவேரீ தட பரிஸரே | திருக்காவிரிக் கரையருகில் | உபாஸீந: | பணிந்தவனாகி |
| ரங்க நகரே | திருவரங்கமா நகரில் | மதுமதந நாராயண ஹரே முராரே கோவிந்த இதி அநிசம் க்ரோசந் | மதுஸூதந! என்பது முதலான திருநாமங்களை இடைவிடாது சொல்லிக் கதறு நின்றவனாய் |
| போகீந்த்ரே | திருவனந்தாழ்வான் மீது | | |
| சயாநம் | பள்ளிகொண்டருளா நின்ற | | |
| சதமக மணிச்யாமல ருசிம் | இந்திர நீலரத்னம் போன்று சாமளமான காந்தியையுடைய பெருமாளை | அஹம் கதா திவஸாந் அபநேஷ்யாமி | அடியேன் எப்போது (ஜீவித சேஷமான) நாட்களையெல்லாம் போக்குவேன்? |

இதில், காவேரீதடபரிஸரே என்றதை 'ரங்கநகரே' என்பதோடு சேர்த்து அந்வயிப்பதன்றிக்கே 'காவேரீதடபரிஸரே க்ரோசந்' என்று அந்வயிப்பதும் அழகியதாம். முந்தின அந்வயத்தில், ஸ்ரீரங்க நகரம் காவிரிக்கரையிலுள்ள தென்றும், ஸ்ரீரங்கநாதன் * தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையா லடிவருடப் பள்ளிகொள்பவ னென்றும் தெரிவிக்கப்பட்டதாகும். பிந்தின அந்வயத்தில், தாம் காவிரியாற்றங்கரையிலே யிருந்துகொண்டு * மதுமதந நாராயணேத்யாதி திருநாமங்களை வாய்வெருவிப் போதுபோக்கக் குதுகலித்திருக்கின்றமை தெரிவிக்கப்பட்டதாகும். இந்த ச்லோகத்தைக் கண்ட சிவபக்தனொருவன் இதுவேசாயலாக, "கதா வாராணஸ்யாம் அமரதடிநீரோதஸி வஸந் வஸாந: கௌபீநம் சிரஸி நிததாநோஞ்ஜலிபுடம், அயே கௌரீநாத த்ரிபுரஹர சம்போ த்ரிநயந ப்ரஸீதேதி க்ரோசந்நிமிஷமிவ நேஷ்யாமி திவஸாந்" என்று கவிபண்ணினானாயிற்று.

**சதமகமணிச்யாமலருசிம்** = சதமகனென்று இந்திரனுக்குப் பெயர். மணியென்றது ரத்னம். இந்திர நீலக்கல்போன்ற எழிலுடைமை சொன்னபடி. * பச்சைமாமலைபோல் மேனி

யென்னப்பட்ட பெருமாளை இங்ஙனே வருணிக்கலாமோ வென்று சங்கிக்கவேண்டா; பச்சை நீலம் கருமை ஆகிய நிறங்கள் கவிஸரணியில் பர்யாயமாகக் கொள்ளப்பட்டன. (3)

कदाऽहं कावेरीविमलसलिले वीतकलुषो भवेयं तत्तीरे श्रममुषि वसेयं घनवने ।
कदा वा तं पुण्ये महति पुलिने मङ्गलगुणं भजेय रङ्गेशं कमलनयनं शेषशयनम् ॥ ॥ ४ ॥

கதாஹம் காவேரீவிமலஸலிலே வீதகலுஷ:
பவேயம் தத்தீரே ச்ரமமுஷி வஸேயம் கநவநே,
கதா வா தம் புண்யே மஹதி புளிநே மங்களகுணம்
பஜேயம் ரங்கேசம் கமலநயநம் சேஷசயநம். (4)

| | | | |
|---|---|---|---|
| காவேரீ விமல ஸலிலே வீத கலுஷ: அஹம் கதா பவேயம் | திருக்காவேரியில் நிர்மலமான தீர்த்தத்திலே (குடைந்தாடி) ஸகல கல்மஷங்களு மற்றவனாக நான் என்றைக்கு ஆவேன்? | புண்யே மஹதி புளிநே | மிகப் புனிதமும் பெருமை தங்கியதுமான மணற்குன்றிலே [ஸ்ரீரங்கத்திலே] |
| | | சேஷசயநம் | அரவணை மேல்பள்ளி கொண்டருளா நின்றவரும் |
| தத்தீரே ச்ரமமுஷி கநவநே கதா வஸேயம் | அந்தக் காவிரியின் கரையில் விடாய் தீர்க்கும் சோலைகளிலே எப்போது வஸிக்கப்பெறுவேன்? | கமல நயநம் | தாமரைபோன்ற திருக் கண்களையுடையவரும் |
| | | மங்கள குணம் | கல்யாணகுண நிதியுமான |
| | | ரங்கேசம் | ஸ்ரீரங்கநாதரை |
| | | கதா வா பஜேயம் | எப்போது ஸேவிக்கப் பெறுவேன்? |

முதல்பாதத்தில் (அவகாஹ்ய) என்றொருபதம் வருவித்துக்கொள்ளலாம். [காவேரீ விமலஸலிலே] திருக்காவேரியின் தீர்த்தத்தைப்பற்றி ஆழ்வார்களிருவர் இரண்டுவிதமாக அருளிச்செய்துள்ளனர். குலசேகராழ்வார் * தெண்ணீர்ப்பொன்னி * என்று தெளிந்த தீர்த்தமாக அருளிச் செய்தார். தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் * தெளிவிலாக் கலங்கள் நீர்சூழ் * என்றருளிச் செய்தார். * ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்ய மநோ யதா * என்றாற்போலே தெளிவுள்ளதாக வருணிக்கவேண்டுமே யொழிய, கலங்கல் நீராக வருணிப்பது கூடுமோ? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * துக்தாப்திர் ஜநகோ ஜநந்யஹமியம் * என்கிற ச்லோகத்தினால் கலக்கத்திற்கு ஹேதுவை உத்ப்ரேக்ஷாரீதியில் காட்டி யருளினர். ஆறுகளுக்குக் கலக்கமும் தெளிவுமாகிய இரண்டும் ஸம்பாவிதமே. இங்கு விமலஸலிலே என்று தெளிவையே அநுபவிக்கிறார். [வீதகல்மஷ:] விரஜாநதீஸ்நாநத்தினால் போக்கவேண்டியதான கல்மஷமும் இங்கே தொலையுமென்க. தத்தீரே கநவநே = இங்கு, * வண்டினமுரலுஞ் சோலை மயிலினமாலுஞ் சோலை, கொண்டல் மீதணவுஞ் சோலை குயிலினங் கூவுஞ் சோலை, அண்டர்கோனமருஞ் சோலை * என்ற திருமாலைப்பாசுரம் நெஞ்சு குளிர அநுஸந்திக்கத் தக்கது. * கதள வகுள ஜம்பூ * * ஸ்புரித சபரதீர்யந்நாளிகேரீ * இத்யாதி ஸ்ரீரங்கராஜஸ்தவச்லோகங்களும் அநுஸந்திக்க.

மூன்றாவது பாதத்தில் 'தத்புண்யே' என்கிற சிலருடைய பாடம் அநந்விதம். புண்யம் புளிநம் என்று இங்கு விவக்ஷிதமானது ஸ்ரீரங்கதிவ்ய க்ஷேத்ர மேயாம். தேசிகனும் பகவத்

த்யாந ஸோபாநத்தில் (2) * ப்ராதுர்ப்பூதம் கநகஸரிதஸ் ஸைகதே ஹம்ஸஜுஷ்டே * என்றவிடத்தில் ஸைகதமாகச் சொல்லிற்றும் ஸ்ரீரங்க க்ஷேத்ரமேயாகும். (4)

पूगीकण्ठद्वयससरसस्निग्धनीरोपकण्ठाम् आविर्मोदस्तिमितशकुनानूदितब्रह्मघोषाम् ।
मार्गेमार्गे पथिकनिवहैरुञ्छ्यमानापवर्गां पश्येयं तां पुनरपि पुरीं श्रीमतीं रङ्गधाम्नः ॥ ॥ ५ ॥

பூகீகண்டத்வயஸஸரஸஸ்நிக்தநீரோபகண்டாம்
ஆவிர்மோதஸ்திமிதசகுநாநூதிதப்ரஹ்மகோஷாம்,
மார்க்கேமார்க்கே பதிகநிவஹைருஞ்ச்யமாநாபவர்க்காம்
பச்யேயம் தாம் புநரபி புரீம் ஸ்ரீமதீம் ரங்கதாம்ந:. (5)

| | | | |
|---|---|---|---|
| பூகீகண்டத்வயஸ ஸரஸ ஸ்நிக்த நீர உபகண்டாம் | பாக்கு மரங்களின் கழுத்தளவாகப் பெருகுகின்றதும் தேனோடுகூடினதும் ஸ்நேஹயுக்தமுமான தீர்த்தத்தை ஸமீபத்திலே யுடையதாய் | பதிக நிவஹை: | வழிநடப்பவர்களின் கூட்டங்களினால் |
| | | மார்க்கே மார்க்கே | வழிகள்தோறும் |
| | | உஞ்சயமாந அபவர்க்காம் | திரட்டி யெடுத்துக்கொள்ளப் படுகிற மோக்ஷத்தை யுடையதான |
| ஆவிர்மோத ஸ்திமித சகுந அநூதித ப்ரஹ்ம கோஷாம் | மகிழ்ச்சியுண்டாகி ஸ்திமிதமாயிருக்கின்ற பறவைகளினால் அநுவாதம் செய்யப்பட்ட வேத கோஷத்தை யுடையதாய் | ரங்கதாம்ந: தாம் ஸ்ரீமதீம் புரீம் | ஸ்ரீரங்கநாதனுடைய அந்தக் கோயிலை |
| | | | (அடியேன்) |
| | | புந: அபி பச்யேயம் | மறுபடியும் ஸேவிக்கப் பெறுவேனா? |

எம்பெருமானை ஸேவிக்கப் பெறுவதிற்காட்டிலும் எம்பெருமானும் பாகவதர்களும் உறையுமிடமான திவ்ய தேசத்தை ஸேவிக்கப் பெறுவதே பெரும் பேறாயிருக்கும் பதியே பரவித் தொழும் தொண்டர்கட்கு. ஆதலால், அந்தத் திருவரங்கம் பெரிய கோயிலையாவது நான் எனது வாழ்நாளில் மீண்டு மொருகால் ஸேவிக்கப் பெறுவேனா வென்கிறார். மூன்று பாதங்களினால் கோயிலை வருணிக்கிறார். [பூகீகண்டே த்யாதி.] * கதள வகுள ஜம்பூ பூக மாகந்த கண்ட த்வயஸ ஸாரஸநீராம் அந்தரா ஸஹ்யகந்யாம் * என்ற ஸ்ரீரங்க ராஜஸ்தவச்லோகம் இங்கு அநுஸந்தேயம். காவிரிக்கரையில் பாக்கு மரங்கள் ஓங்கி வளர்ந்து விளங்குகின்றன; அவற்றின் கழுத்தே கட்டளையாக வெள்ளம் பெருகுகின்றது. அந்த வெள்ளநீர் தேனொழுகப் பெற்று மஸ்ருணமாகி உள்துறைவீதியருகிலேயும் ப்ரவஹியாநின்றதென்கை. * வெள்ளநீர் பரந்துபாயும் விரிபொழிலரங்கமிறே.

[ஆவிர்மோதே த்யாதி.] காவிரிக்கரையில் பரமைகாந்திகள் நித்யகர்மாநுஷ்டானஞ் செய்து ப்ரஹ்மயஜ்ஞபாராயணஞ் செய்யாநிற்க, அது கேட்டுக் கேட்டு அங்குள்ள கிளி முதலிய பறவைகளெல்லாம் அந்த வேதவாக்கியங்களை அநுவாதம் செய்கின்றனவாம். * அருமாமறையந்தணர் சிந்தைபுக, செவ்வாய்க்கிளி நான்மறைபாடு தில்லைத் திருச்சித்ரகூடம் * என்றார் திருமங்கையாழ்வாரும். இவ்விரண்டு பாதங்களுக்குஞ் சேர * தோதவத்தித் தூய் மறையோர் துறைபடியத் துளும்பியெங்கும், போதில்வைத்த தேன் சொரியும் புனலரங்கமென்பதுவே * என்ற பெரியாழ்வார் பாசுரம் அநுஸந்தேயம்.

[மார்க்கே மார்க்கே இத்யாதி.] கோயிலில் வீதிகள்தோறும் வழி போமவர்கள் மோக்ஷத்தைப் பொறுக்கி யெடுத்துக்கொள்ளுகிறார்களென்றவிது—வழியடைவே கோயில்

வீதியேறச் செல்பவர்களுக்கு முக்தி கரஸ்தமென்றபடி. கோயில்வாஸமே மோக்ஷமென்று தாகவுங் கூறுவாருளர். * **காவேரீ விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம், ஸ வாஸுதேவோ ரங்கேச: ப்ரத்யக்ஷம் பரமம் பதம்** * என்னக்கடவதிறே. ஆக இப்படிப்பட்ட ஸ்ரீரங்கதிவ்ய க்ஷேத்திரத்தை அடியேன் மீண்டுமொருகால் ஸேவிக்கப் பெறுவேனே? என்று தமது நேயாசையை வெளியிட்டருளினாராயிற்று. நான்காவது பாதத்தில் **அபி** என்ற அவ்யயம் கேள்விப்பொருளது. ... ... .. (5)

न जातु पीतामृतमूर्च्छितानां नाकौकसां नन्दनवाटिकासु ।
रङ्गेश्वर ! त्वत्पुरमाश्रितानां रथ्याशुनामन्यतमो भवेयम् ॥ ॥ ६ ॥

**ந ஜாது பீதாம்ருதமூர்ச்சிதாநாம் நாகௌகஸாம் நந்தநவாடிகாஸு,**
**ரங்கேச்வர த்வத்புரமாச்ரிதாநாம் ரத்த்யாசுநாம் அந்யதமோ பவேயம்.** (6)

| | | | |
|---|---|---|---|
| *ரங்கேச்வர !* | *ஸ்ரீரங்கநாதனே!* | | *(பின்னையோவென்னில்)* |
| *நந்தந வாடிகாஸு* | *தேவேந்திரனது சோலைப் புறங்களிலே* | *த்வத் புரம் ஆச்ரிதாநாம்* | *தேவரீருடைய ஸ்ரீரங்கநகரியைப் பற்றி வாழ்கிற* |
| *பீத அம்ருத மூர்ச்சிதாநாம்* | *அம்ருத பானம்பண்ணி மயங்கிக் கிடக்கிற* | | |
| *நாகௌகஸாம் அந்யதம: ந ஜாது பவேயம்* | *அமரர்களுள் ஒருவனாக ஒருகாலும் ஆகக்கடவேனல்லேன் ;* | *ரத்த்யா சுநாம் அந்யதம: பவேயம்* | *திருவீதி நாய்களுள் ஒருநாயாகப்பிறக்கக்கடவேன்.* |

* இந்திர லோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேனென்றிருக்கு முறுதியை வெளியிடுகிறாரிதில். பக்தர்களிலே சிலர் எம்பெருமான் திருவடிகளிலே பிரார்த்திக்கும் போது மறுபிறவி நேராதபடி முக்தியையளிக்கவேணு மென்பர்கள். ஆண்டாள் * எற்றைக்கு **மேழேழ் பிறவிக்கு**மென்கையாலே எத்தனை பிறவிகள் பிறக்கப் பெற்றாலும் அது அநிஷ்டமன்று என்றும், பிறக்கும் பிறவிகள் திவ்ய தேசவாஸத்திற்கு அநுகூலங்களாயிருக்கப் பெறில் குறையில்லையென்றும் இருப்பார் பலருளர். அவர்களது திரளில் சேர்ந்தவராயிற்று பட்டர். பெரிய திருமடலில் * அறத்தின் வழிமுயன்ற அன்னவர்தாங் கண்டீர்கள் ஆயிரக்கண்வானவர்கோன் * என்று தொடங்கி * இன்னமுதம் மாந்தியிருப்பர் * என்னுமளவாக மிகவிரிவாய்க் கூறப்பட்டுள்ள தேவலோக போகத்தை யநுபவிக்கக் குதூஹலமுடையேனல்லேன்; திருவரங்கம் பெரிய கோயில் திருவீதிகளிலே திறந்து கிடந்த வாசல் தோறும் நுழைந்து திரியும் ஜந்துக்களிலே ஒன்றாகப் பிறக்கப் பெறவேணு மென்றாராயிற்று. இவ்விடத்தில் "வாய்க்குங் குருகைத் திருவீதியெச்சிலை வாரியுண்ட, நாய்க்கும் பரமபதமளித்தாய்" என்ற பாசுரம் நினைக்கத் தக்கது. ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரய: * என்றச்லோகத்தில் ஸ்ரீரங்கத்திலுள்ள மநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களெல்லாம் நித்யமுக்த முமுக்ஷுவர்க்கங்களேயன்றி வேறில்லையென்று அருளிச் செய்ததும் இங்கு ஸ்மரிக்கத் தக்கது. ஆக இந்த ஆறுச்லோகங்களே ஸ்ரீரங்கநாதஸ்தோத்திரமென்கிற இந்த ஸ்துதியிற் சேர்ந்தவை. மேலுள்ள இரண்டுச்லோகங்கள் முக்தகங்கள்; அவையும் இந்த ஸ்தோத்திரத்துடன் சேர்த்து அநுஸந்திக்கப்படுமவை. ... (6)

असन्निकृष्टस्य निकृष्टजन्तोर्मिथ्यापवादेन करोषि शान्तिम् ।
ततो निकृष्टे मयि सन्निकृष्टे कां निष्कृतिं रङ्गपते करोषि ॥

அஸந்நிக்ருஷ்டஸ்ய நிக்ருஷ்டஜந்தோர் மித்த்யாபவாதேந கரோஷி சாந்திம்,
ததோ நிக்ருஷ்டே மயி ஸந்நிக்ருஷ்டே காம் நிஷ்க்ருதிம் ரங்கபதே கரோஷி.

| | | | |
|---|---|---|---|
| ரங்கபதே ! | ஸ்ரீரங்கநாதரே ! | | |
| அஸந்நிக்ருஷ்டஸ்ய | (உண்மையில்) உமது அருகில் வாராத | தத: நிக்ருஷ்டே மயி | அந்த நாயினும் கடைகெட்டவனான அடியேன் |
| நிக்ருஷ்ட ஜந்தோ: | ஒரு நாயின் ஸம்பந்தமான | ஸந்நிக்ருஷ்டே | வெகு ஸமீபத்தில் வந்திருக்கும் போது |
| மித்த்யா அபவாதேந | பொய்யான அபவாதத்தினால் | காம் நிஷ்க்ருதிம் கரோஷி | என்ன சாந்தி செய்வீர் ? |
| சாந்திம் கரோஷி | சாந்திகர்மாவைச் செய்து போரா நின்றீர் ? | | |

இந்தச்லோகம் ஒரு ஐதிஹ்யத்தினால் தோன்றியது. அதாவது, பட்டர் ஒருநாள் நம்பெருமாள் புறப்பாட்டுக்காகத் திருமாளிகையில் நின்றும் புறப்பட்டுத் திருப்புன்னைக் கீழே வந்து சேர்ந்து முதலிகளின் செவிகுளிர உபய வேதாந்த விஷயங்களையருளிச் செய்து கொண்டிருந்தார். கோவில்கொத்திலுள்ளவர்கள் புறப்பாட்டுக்கு முன் அவ்விடத்தே வந்து எழுந்தருளப்பண்ணுவது வழக்கம். அன்று வெகு நாழிகையாகியும் ஒருவரும் வந்து ஸமயம் தெரிவிக்கவில்லை. ஏன் இன்னமும் புறப்பாடு நடைபெறவில்லையென்று தெரிந்து கொள்வதற்காக ஸ்வாமி தாமே ஸன்னிதிக்குள் வந்து விசாரிக்கையில், ஒரு நாய் உள்ளே வந்து விட்டதாகவும் அதற்காக சாந்திஹோமம் நடை பெறுவதாகவும் அதனால் காலதாமதமாகவும் தெரிந்துகொண்டு நேரே பெரிய பெருமாள்பாடே விடை கொண்டு இந்தச்லோகத்தை விண்ணப்பஞ் செய்தாராம்; நாய் ஸன்னிதிக்குள் ஏதோவொரு புறத்தில் நுழைந்ததேயன்றி கர்ப்பக்ருஹத்தினுள் நுழைந்திலது; அதற்கே இவ்வளவு சாந்தி அனுஷ்டிப்பதாயின் அந்த நாயினும் கடைகெட்ட அடியேன் தேவரீருடைய அருகிலேயே வந்து விட்டேனே; இதற்குஎவ்விதமான பிராயச்சித்தம் செய்தருளத் திருவுள்ளமோ அறியேனென்று ரஸோக்தியாக அருளிச் செய்தார்.

இதில் "மித்த்யாபவாதேந" என்பதற்குச் சில ரஸிகர்கள் பணிப்பதொன்றுண்டு; ஸன்னிதியில் சாந்திஹோமம் நடந்தால் அர்ச்சகபரிசாரகர்களுக்கு வருமானமுண்டாதலால் அதையுத்தேசித்து அவர்களில் சிலர் நாய்க்குட்டியொன்றை ஒரு கூடையிலிட்டு உள்ளேகொண்டுபோய் விட்டிட்டு 'ஐயோ! நாய்வந்து விட்டது, சாந்திஹோமம் செய்ய வேணும்' என்பர்களாம்; சிலஸமயங்களில் அப்படியும் செய்யாமல் 'நாய் உள்ளேவந்து ஓடிற்று, நான்கண்டேன்' என்று பொய்யாகச் சொல்லி சாந்திஹோமம் செய்ய நிர்ப்பந்திப்பர்களாம்; இது பட்டருடைய திருச்செவியில்பட்டு 'மித்யாபவாதேந கரோஷி சாந்திம்' என்றருளிச் செய்தாரென்று.

கீழ்ச்லோகத்தில் "ரத்த்யாசுநாம் அந்யதமோ பவேயம்" என்றிருக்கையாலே அதற்குச் சார்பாக இந்தமுக்தகமும் இங்கேசேர்த்து அநுஸந்திக்கப்படுகின்றதுபோலும்.

श्रीरङ्गं करिशैलमञ्जनगिरिं ताक्ष्याद्रिसिंहाचलौ
श्रीकूर्मं पुरुषोत्तमं च बदरीनारायणं नैमिशम् ।
श्रीमद्द्वारवतीप्रयागमधुरायोध्यागयापुष्करं
साल्ग्रामगिरिं निषेव्य रमते रामानुजोऽयं मुनिः ॥

ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரிஸிம்ஹாசலௌ
ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ் ச பதரீநாராயணம் நைமிசம்,
ஸ்ரீமத்த்வாரவதீ ப்ரயாக மதுராயோத்யா கயாபுஷ்கரம்
ஸாளக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:.

எம்பெருமானாருடைய திவ்யதேசயாத்திரையைப்பற்றி நித்யாநுஸந்தானம் செய்வதற்காகபட்டர் பண்டே அருளிச்செய்திருந்த முக்தகம் இது. தென்திருவரங்கம் திருவத்திமாமலை திருவேங்கடமலை (கருடாசலமென்கிற) திருநாராயணபுரம் ஸிம்ஹாசலம் ஸ்ரீகூர்மம் ஜகந்நாதம் ஸ்ரீபதரிகாச்ரமம் நைமிசாரணியம் த்வாரகை ப்ரயாகை வடமதுரை அயோத்யை கயை புஷ்கரம் ஸாளக்ராமம் ஆகிய இந்ததிவ்யக்ஷேத்ரங்களிலே எம்பெருமானார் உகந்து வர்த்தித்தபடியை அருளிச்செய்தாராயிற்று.

மூன்றுவதுபாதம் முழுவதும் ஸமஸ்தபதம். *** ஸர்வோ த்வந்த்வோ விபாஷயா ஏகவத் பவதி *** என்கிற பரிபாஷையினால் ஏகவசநாந்தமாய்க் கிடக்கிறது. **"அயோத்யாகயா:"** என்று விஸர்க்காந்தமான பாடமும் காண்கிறது. அப்போது அதுவரைக்கும் ஒருபதம். த்விதீயாபஹுவசநாந்தம். இதுவும் பொருத்தமான பாடமே. ... (*)

பட்டர்திருவடிகளேசரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய

## ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரவுரை

முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

கூரத்தாழ்வான் இளைய திருக்குமாரரான ஸ்ரீவேதவ்யாஸபட்டரென்கிற
சீராமப்பிள்ளையின் திருக்குமாரரான வேதாசார்யபட்டர்

## அருளிச்செய்த

# க்ஷமாஷோடசிஸ்தோத்ரம்.

ஸ்ரீரங்கநாதனுடைய பொறுமையென்னுங் குணத்தை வருணிக்கும்
பதினாறுச்லோகங்கள் கொண்ட துதி.

[ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய உரையுடன் கூடியது.]

—[—]—

தனியன்.

यश्चक्रे रङ्गिणस्स्तोत्रं क्षमाषोडशिनामकम् ।
वेदव्यासस्य तनयं वेदाचार्यं तमाश्रये ॥

**யச் சக்ரே ரங்கிணஸ் ஸ்தோத்ரம் க்ஷமாஷோடசிநாமகம்,**
**வேதவ்யாஸஸ்ய தநயம் வேதாசார்யம் தமாச்ரயே.**

ஸ்ரீரங்கநாதன் விஷயமான க்ஷமாஷோடசிஸ்தோத்ரத்தை யருளிச்செய்தவரும் வேதவ்யாஸ பட்டருடைய திருக்குமாரருமான வேதாசார்யபட்டரைப் பணிகின்றேனென்கை.

க்ஷமாவிஷயமான ஷோடசச்லோகங்களையுடைய ஸ்தோத்ரமாதலால் க்ஷமாஷோடசிஸ்தோத்ரமென்று இதற்குத் திருநாமமாயிற்று.

**श्रीरङ्गेश ! यया करोषि जगतां सृष्टिप्रतिष्ठाक्षयान् अत्रामुत्र च भोगमक्षयसुखं मोक्षं च तत्तत्तृषाम् ।**
**त्वत्स्वातन्त्र्यमपोह्य कल्पितजगत्क्षेमाऽतिहृद्या स्वतः क्षान्तिस्ते करुणासखी विजयतां क्षेमाय सर्वात्मनाम् ॥ १ ॥**

ஸ்ரீரங்கேச யயா கரோஷி ஜகதாம் ஸ்ருஷ்டிப்ரதிஷ்டாக்ஷயாந்
அத்ராமுத்ர ச போகமக்ஷயஸுகம் மோக்ஷஞ்ச தத்தத்த்ருஷாம்,
த்வத்ஸ்வாதந்த்ர்யமபாஸ்ய கல்பிதஜகத்க்ஷேமாதிஹ்ருத்யா ஸ்வத:
க்ஷாந்திஸ் தே கருணாஸகீ விஜயதாம் க்ஷேமாய ஸர்வாத்மநாம். (1)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேச ! | ஸ்ரீரங்கநாதரே ! | த்வத்ஸ்வாதந்த்ர்யம் அபாஸ்ய கல்பிதஜகத்க்ஷேமா | தேவரீருடைய ஸ்வாதந்திரியத்தைத் தள்ளி ஜகத்துக்கு க்ஷேமத்தை விளைவிப்பதாய் |
| ஜகதாம் | உலகங்களினுடைய | ஸ்வத: அதிஹ்ருத்யா | இயற்கையாகவே பரம போக்யமாய் |
| ஸ்ருஷ்டி ப்ரதிஷ்டா க்ஷயாந் | படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் காரியங்களையும் | கருணாஸகீ | கருணா குணத்திற்குத் துணையான |
| அத்ர போகம் | இஹலோக போகங்களையும் | தே க்ஷாந்தி: | தேவரீரது பொறுமைக் குணமானது |
| அமுத்ர போகம் ச | ஆமுஷ்மிக போகங்களையும் | ஸர்வாத்மநாம் க்ஷேமாய விஜயதாம் | ஸகல சேதநருடையவும் க்ஷேமத்தின் பொருட்டு நித்ய ஸ்ரீர்நித்ய மங்களமாக விளங்குக. |
| அக்ஷயஸுகம் | கைவல்யானந்தத்தையும் | | |
| மோக்ஷம் ச | பரமபதாநந்தத்தையும் | | |
| தத்தத் த்ருஷாம் | அவ்வவற்றில் விருப்ப முடையவர்களுக்கு | | |
| யயா | யாதொரு பொறுமைக் குணத்தினால் | | |
| கரோஷி | உண்டாக்குகின்றீரோ, | | |
| (ஸா) | அப்படிப்பட்டதாய் | | |

இந்த திவ்யக்ரந்தம் இடையூறின்றி முடிவதற்காகச் செய்த மங்களாசரணமிது. ஆசீர் நமஸ்க்ரியா வஸ்துநிர்தேசங்களுள் இது ஆசீஸ்ஸெனப்படும். இந்த ஸ்துதி முழுவதும் க்ஷமை யென்கிற ஒரு குணத்தைப்பற்றியதே யாதலால் அந்த க்ஷமை தனக்கே இந்த ஆசீஸ்ஸுமாயிற்று.

ஸகலஜகத்துக்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்வதற்கும் இம்மை மறுமையின்பங்களை யளிப்பதற்கும் ஸாதனமாகி ஜகத் க்ஷேமத்தை நிர்வஹியாநின்றது எம்பெருமானுடைய க்ஷமாகுணம். அப்பெருமானுடைய நிரங்குச ஸ்வாதந்த்ர்யமே தலையெடுக்குமாகில் ஜகத்துக்கு க்ஷேமம் அரிதாகும்; இந்த க்ஷமையானது அந்த ஸ்வாதந்த்ரியத்தைத் தலையெடுக்கவொட்டாதபடி அமுக்கி, கருணாகுணத்தையும் துணைகொண்டு அவ்வோபுருஷார்த்தங்களிலே ருசியுடைய சேதநர்களுக்கெல்லாம் வேண்டினவற்றை யளித்துக் காக்கின்றதாயிற்று. இப்படிப்பட்ட க்ஷமாகுணம் நீடூழி நின்று விளங்கி உலகுக்கெல்லாம் சேமவைப்பாக்வேணு மென்றாராயிற்று.

ரக்ஷணத்திற்கு க்ஷமை வேண்டுமானாலும் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்கும் க்ஷமை வேண்டுமோ வென்னில்; வேண்டும். “**யௌகபத்யம் அநுக்ரஹகார்யம்**” என்பர் நம் முதலிகள். இது தன்னை ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் * **ஸம்வர்த்தவர்த்தி நிகிலம்** * என்ற ச்லோகத்தில் ஆழ்வான் விரியவருளிச் செய்தார். கரணகளேபரங்களை அநீதிப்ரவ்ருத்திகளுக்கு ஹேதுவாக்கி அநர்த்தப்பட்டுப் போகாதபடி ஒடுக்கிவைக்கைதான் ஸம்ஹாரமாகையாலே அதுவும் அநுக்ரஹ கார்யமென்றிட்டு க்ஷமாஸாபேக்ஷமா யிருக்கும்.

**அக்ஷயஸுகம்** என்று அபுநராவ்ருத்திலக்ஷணமான கைவல்யஸுகத்தைச் சொல்லுகிறது; * **ஐச்வர்ய மக்ஷரகதிம்** என்ற விடத்திற்போல. மூன்றாவது பாதத்தில் **அபாஸ்ய, அபோஹ்ய** என்பன பாடபேதங்கள்: பொருள் ஒன்றே. **கருணாஸகீ**—தத்புருஷனாகவுமாம் பஹுவ்ரீஹியாகவுமாம். கருணையும் பொறுமையும் கூடியே உலகுக்கு க்ஷேமமளிப்பன. (1)

पापानां प्रथमोऽस्म्यहं भवति चेच्छास्त्रं प्रमाणं परं श्रीरङ्गेश ! न विद्यतेऽत्र विशयस्सन्त्येव ते साक्षिणः ।
पृष्ट्वा तानधुना मयोदितमिदं सत्येन गृह्येत चेत् सत्यं ह्युक्तमिति क्षमस्व भगवन् सर्वं तदस्मत्कृतम् ॥ २ ॥

பாபாநாம் ப்ரதமோஸ்ம்யஹம் பவதி சேத் சாஸ்த்ரம் ப்ரமாணம் பரம்
ஸ்ரீரங்கேச ந வித்யதேத்ர விசயஸ் ஸந்த்யேவ தே ஸாக்ஷிண:,
ப்ருஷ்ட்வா தாநதுநா மயோதிதமிதம் ஸத்யேந க்ருஹ்யேத சேத்
ஸத்யம் ஹ்யுக்தமிதி க்ஷமஸ்வ பகவந் ஸர்வம் ததஸ்மத்க்ருதம். (2)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேச ! | ஸ்ரீரங்கநாதரே !, | மயா உதிதம் இதம் ஸத்யேந க்ருஹ்யேத சேத் | அடியேன் சொன்ன விது ஸத்யமாகக் கொள்ளப்படுமாகில், |
| அஹம் பாபாநாம் ப்ரதம: அஸ்மி | அடியேன் பாபிகளில் தலைவனாயுள்ளவன்; | | |
| சாஸ்த்ரம் பரம் ப்ரமாணம் பவதி சேத் | சாஸ்த்ரமானது பரம ப்ரமாணமாக ஆகுமாகில் | பகவந் ! | எம்பெருமானே ! |
| அத்ர விசய: ந வித்யதே | அடியேன் மஹா பாபியென்பதில் ஸந்தேஹமில்லை; | ஸத்யம் ஹி உக்தம் இதி | (இவனால்) உண்மை பேசப்பட்டதன்றோ வென்று இதையே குணமாகக் கொண்டு |
| தே ஸாக்ஷிண: ஸந்தி ஏவ | தேவரீருக்கு [விசாரிக்கும்படியாக] ஸாக்ஷிகள் இருக்கவேயிருக்கின்றார்கள்; | அஸ்மத் க்ருதம் ஸர்வம் தத் க்ஷமஸ்வ | அடியேன் செய்த அந்தப் பாவங்களையெல்லாம் பொறுத்தருள்க. |
| அதுநா தாந் ப்ருஷ்ட்வா | இப்போது அவர்களை வினவி | | |

*** எவ்வளவு பாபங்கள் செய்தாலும் பொய்சொல்லி யொளித்திடாமல் உள்ளது உள்ளபடியே ஒப்புக்கொண்டால் எம்பெருமானுடைய பொறுமைக்கு இலக்காகலாமென்பது இந்தச்ஸ்லோகத்தினால் காட்டப்படுகிறது. ஸ்வாமிந்! அடியேன் பாவமேசெய்து பாவியானவர்களில் முதல்வனாக எண்ணக் கூடியவனாயிருக்கின்றேன் என்பதில் ஸந்தேஹமில்லை. நான்சொல்லுகிறவிது பொய்யென்று திருவுள்ளமாகில் தேவரீரால் ஏற்படுத்தப்பட்டுள்ள ஸாக்ஷிகளான சந்த்ரஸூர்ய பூதபஞ்சகாதிகளைக் கேட்டு உண்மை தெளியவடுக்கும்; அங்ஙனம் கேட்டு அவர்களால் அடியேனை ஸத்யவாதியாகத் திருவுள்ளம்பற்ற நேர்ந்தால், ஸத்யமென்கிற வொருகுணமுடைய விவன்பக்கலிலே நாம் க்ஷமை காட்டவேண்டாவோ வென்று தேவரீருக்கே இரக்கம் பிறந்துதீரும் என்பது பரமதாத்பர்யம். செய்தபாவங்களை இல்லைசெய்யாதே இசைந்து போருகின்ற வடியேனை க்ஷமைக்கு இலக்காக்குவதே தகுதியென்றாராயிற்று. "பவதிசேத் சாஸ்த்ரம் ப்ரமாணம் பரம்" என்பது மத்யம தீபமாகி முன்னும்பின்னும் அந்வயிக்கும். 'தே' என்பது ப்ரதமாபஹுவசநமாகவும் ஷஷ்ட்யேக வசனமாகவும் கொள்ளத்தகும். ஸத்யேந என்றது ஸத்யத்வேந என்றபடி. 'தத்த்வேந' என்றும் பாடமுண்டு. (2)

त्वत्क्षान्तिः खलु रङ्गराज ! महती तस्याः पुनस्तोषणे पर्याप्तं न समस्तचेतनकृतं पापं ततो मामकम् ।
लक्ष्यं नेति न मोक्तुमर्हसि यतः कुत्रापि तुल्यो मया नान्यस्सिद्ध्यति पापकृत् तदधुना लब्धं तु नोपेक्ष्यताम् ॥

த்வத்க்ஷாந்தி: கலு ரங்கராஜ! மஹதீ தஸ்யா: புநஸ் தோஷணே
பர்யாப்தம் ந ஸமஸ்த சேதநக்ருதம் பாபம் ததோ மாமகம்,
லக்ஷ்யம் நேதி ந மோக்துமர்ஹஸி யத: குத்ராபி துல்யோ மயா
நாந்யஸ் ஸித்த்யதி பாபக்ருத் தததுநா லப்தம் து நோபேக்ஷ்யதாம். (3)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கராஜ! | ஸ்ரீரங்கநாதனே! | மாமகம் பாபம் ந லக்ஷ்யம் இதி | நானொருவன் செய்த பாபம் எந்தமூலைக்கென்று நினைத்து |
| த்வத் க்ஷாந்தி: | உன்னுடைய பொறுமைக்குணமானது | மோக்தும் ந அர்ஹஸி | என்னை நீஉபேக்ஷிக்கலாகாது; |
| மஹதீ கலு | மிகவும் பெருவயிறு உடையதன்றோ; | யத: | ஏனென்றால், |
| தஸ்யா: தோஷணே புந: | அதை (வயிறார வுணவுகொடுத்து) த்ருப்தி செய்விக்கும் விஷயத்தில் | மயா துல்ய: பாபக்ருத் அந்ய: குத்ராபி ந ஸித்யதி | என்னோடொத்த பாபிஷ்டன் வேறொருவன் இவ்வுலகிலெங்கும் தேறமாட்டானன்றோ; |
| ஸமஸ்த சேதநக்ருதம் பாபம் ந பர்யாப்தம் | உலகிலுள்ள சேதநர்களெல்லாரும் செய்த பாவமும் வல்லதன்று; | தத் அதுநா லப்தம் து ந உபேக்ஷ்யதாம் | ஆதலால் இப்போதுகிடைத்தவிதனை உபேக்ஷிக்க வேண்டா. |
| தத: | ஆனபின்பு | | |

ஸ்ரீரங்கநாதரே! தேவரீர் *ஒருவரையும் நின்னொப்பாரொப்பிலா வென்னப்பா* என்றும் *தன்னொப்பாரில்லப்பன்* என்றும் காருண்ய ஸௌந்தர்யாதிகளிலே ஒப்பற்றவராகப் பேர்படைத் திருக்குமாபோலே அடியேனும் பாபிகளில் ஒப்பற்றவனென்று பேர் பெற்றிருக்கின்றேன்; ஆதலால் என்னொருவனுடைய பாபங்களைக் கொண்டுதான் தேவரீருடைய க்ஷமை வயிறாரவுண்டு களிக்கமுடியும். உலகத்திலுள்ள மற்றெல்லாருடையவும் பாபங்களும் ஏகதேசமாக இருந்தாலும் அடியேனுடைய பாபங்களை அப்படி நினைக்கலாகாது; நானொருவன்தவிர மற்ற ஸமஸ்த சேதநர்களும் செய்தபாவங்களத்தனையும் தேவரீருடைய க்ஷமைக்கு ஒருதுற்றுக்கு ஆற்றாவென்பது வாஸ்தவமே. அடியேன் பாபிகளில் விலக்ஷணனாதலால் எனது பாபங்களைக் கொண்டே தேவரீருடைய க்ஷமை வயிறு நிரப்பத் தகுமென்றாராயிற்று.

தயாசதகத்திலுள்ள * மயி திஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே மிததோஷாநிதராந் விசிந்வதீ த்வம், அபராதசதைரபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே! கதம் பவித்ரீ * என்றச்லோகம் பெரும்பாலு மிதனையொக்கும்.

“ த்வத்க்ஷாந்தி: மஹதீ ” என்றது மஹத்தான குக்ஷியையுடையது என்றபடி. (3)

पुण्यं पापमिति द्वयं खलु तयोः पूर्वेण यत्साध्यते तत्त्वद्विस्मृतिकारकं तनुभृतां रङ्गेश ! संजायते ।
पाश्चात्यस्य तु यत्फलं तदिह ते दुःखच्छिदः स्मारकं तेनानेन कृतं तदेव शिशुनेत्यस्मत्कृतं क्षम्यताम् ॥ ४ ॥

புண்யம் பாபமிதி த்வயம் கலு தயோ: பூர்வேண யத் ஸாத்யதே
தத் த்வத்விஸ்ம்ருதிகாரகம் தநுப்ருதாம் ரங்கேச ஸஞ்ஜாயதே,
பாச்சாத்யஸ்ய து யத் பலம் ததிஹ தே துக்கச்சிதஸ் ஸ்மாரகம்
தேநாநேந க்ருதம் ததேவ சிசுநேத்யஸ்மத்க்ருதம் க்ஷம்யதாம். (4)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கேச! | ஸ்ரீரங்கநாதனே! | இஹ | இவ்வுலகின்கண் |
| புண்யம் பாபம் இதி த்வயம் கலு | (உலகில்) புண்யமென்றும் பாவமென்றுமிரண்டுதானே யுள்ளது; | துக்கச்சித: தே ஸ்மாரகம் | ஆர்த்திஹரனான உன்னை (இடைவிடாது) நினைக்கச்செய்வதாகும்; |
| தயோ: பூர்வேண யத் ஸாத்யதே | அவ்விரண்டினுள் முந்தியதான புண்யத்தினால் பெறக்கூடியது ஸம்பத்து; | | ஆதலால் |
| | | தேந அநேந சிசுநா தத் ஏவ க்ருதம் இதி | இந்தப் பையல் (நம்மை அநவரதம் நினைக்கச் செய்யுமதான) அந்தப் பாபத்தையே |
| தத் தநுப்ருதாம்த்வத்விஸ்ம்ருதி காரகம் ஸம்ஜாயதே | அது மனிதர்களுக்கு உன்னை மறக்கச் செய்வதாக ஆகின்றது; | அஸ்மத்க்ருதம் க்ஷம்யதாம் | செய்து போந்தானென்று திருவுள்ளம்பற்றி யாம் செய்த தீவினை யெல்லாம் க்ஷமிக்கத் தக்கது. |
| பாச்சாத்யஸ்ய து யத் பலம் தத் | மற்றையதான பாபத்தின் பயனைப் பெறக்கூடிய துக்கானுபவமானது | | |

தாம் பாபம் செய்தது மிகவும் பொருத்தமானதென்று ஒருசமத்காரமாகப் பேசுகிறாரிதில். உலகில் புண்யமென்றும் பாபமென்றும் இரண்டேயுள்ளன. புண்யம் செய்தால் அதன்பலனாக ஸம்பத்துக்களையநுபவிக்க நேரும்; பாபஞ்செய்தால் அதன்பலனாகப் பலவகைக் கஷ்டங்களையநுபவிக்க நேரும். ஸம்பத்துக்களை யநுபவிக்க நேர்ந்தால் பகவானை ஸ்மரிக்க அவகாசமே யில்லையாகிறது; கஷ்டங்களையநுபவிக்கும் போதுதான் "பகவானே! உனக்குக் கண்ணில்லையா?" என்று சொல்லிக்கொண்டாவது பகவானைச் சிந்திக்க நேர்கின்றது. ஆகவே பகவானுடைய விஸ்மரணத்தை யுண்டுபண்ணவல்ல ஸம்பத்துக்களுக்குக் காரணபூதமான புண்யத்தைச் செய்வதிற்காட்டிலும், பகவானுடைய நிரந்தரஸ்மரணத்தை யுண்டு பண்ணவல்ல கஷ்டங்களுக்குக் காரணபூதமான பாபத்தைச் செய்வதேயன்றோ நன்று. இந்த நிரூபணத்தின்படி நன்றென நினைக்கத்தக்க பாபத்தையே அடியேன் செய்திருப்பது நன்றுதானே; இதனை க்ஷமிக்கத் தடையுண்டோ வென்கிறார். புண்யம் செய்து செல்வ வாழ்க்கையிலிருப்பவர்கள் பெரும்பாலும் எம்பெருமானை ஸ்மரிக்கவும் அவகாசம் பெறார்களென்பதும், பாபஞ்செய்து க்லேசங்களையநுபவிக்குமவர்களே எம்பெருமானை இடையறாது சிந்திக்க அவகாசம் பெறுகின்றார்களென்பதும் இங்குத் தெரிவிக்கப்பட்டதாகிறது. " **पूर्वपुण्यविभवव्ययलब्धास्सम्पदो विपद एव विमृष्टाः**—பூர்வபுண்ய விபவவ்யயலப்தாஸ் ஸம்பதோ விபத ஏவ விம்ருஷ்டா:." என்ற நைஷதச்லோகம் இதில் இரண்டாவது பாதத்திற்குச்சேர அநுஸந்தேயம். (4)

**पुण्यं यत्तव पूजनं भवति चेत् तत्कर्तुरिष्टे कृते तत्स्याद्रङ्गपते! कृतप्रतिकृतं सर्वेऽपि तत्कुर्वते।**
**पापं चेदपराध एव भवतस्तत्कर्तृसंरक्षणे क्षान्तिस्ते निरुपाधिका निरुपमा लक्ष्येत तत् क्षम्यताम्॥ ५॥**

**புண்யம் யத் தவ.பூஜநம் பவதி சேத் தத்கர்த்துரிஷ்டே க்ருதே**
**தத் ஸ்யாத் ரங்கபதே க்ருதப்ரதிக்ருதம் ஸர்வேபி தத் குர்வதே,**
**பாபஞ்சேத் அபராத ஏவ பவதஸ் தத்கர்த்ருஸம்ரக்ஷணே**
**க்ஷாந்திஸ் தே நிருபாதிகா நிருபமா லக்ஷ்யேத தத் க்ஷம்யதாம்.** (5)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கபதே! | ஸ்ரீரங்கநாதனே! | பாபம் சேத் பவத: அபராத: ஏவ | உன்விஷயத்தில் அபராதப்படுவதென்பது யாதோ, அதுவே பாபமெனப்படும்; |
| புண்யம் (இதி) யத் தவ பூஜநம் பவதி சேத் | புண்யமென்பது உன்னை வழிபாடு செய்வதாக முடிகின்றது. | தத்கர்த்ரு ஸம்ரக்ஷணே (ஸதி) | அப்படிப்பட்ட பாபம் செய்யுமவனை ரக்ஷிக்குமளவில் |
| தத்கர்த்து: இஷ்டே க்ருதே | அந்தப்புண்ணியம் செய்தவனுக்கு (நீ) இஷ்டஸித்தியைப்பண்ணிக் கொடுத்தால் | தே க்ஷாந்தி: | உன்னுடைய பொறுமைக்குணமானது |
| தத் க்ருதப்ரதிக்ருதம் ஸ்யாத் | அது, செய்த நன்றிக்குக் கைம்மாறு செய்ததாகுமத்தனை; | நிருபாதிகா நிருபமா லக்ஷ்யேத | உபாதியற்றதாகவும் ஒப்பற்றதாகவும் காணப்படும்; |
| தத் ஸர்வே அபி குர்வதே | அவ்விதமான காரியத்தை (உலகில்) எல்லாருமே செய்கின்றார்கள். | தத் க்ஷம்யதாம் | ஆகவே க்ஷமித்தருள்வது. |

புண்யம் செய்தவர்களை ரக்ஷிப்பதிற் காட்டிலும் பாபம் செய்தவர்களை ரக்ஷிப்பதே யுக்தமானதென்று நிரூபிக்கிறாரிதில். * **ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி நவைஷ்ணவ:** * என்று எம்பெருமான் தானே சோதிவாய் திறந்தருளிச் செய்தபடியே ச்ருதி ஸ்மிருதி முதலானவற்றில் விதித்தபடி செய்கை புண்யமென்றும், அவற்றில் மறுக்கப்பட்டவற்றைச் செய்கை பாபமென்றும் உலகமறியும். * **வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா: நாந்யஸ் தத்தோஷகாரக:** * என்ற பிரமாணத்தின்படி வர்ணாச்ரமாசாரங்களோடு கூடியிருக்கையாகிற புண்யமானது பகவதாராதந ரூபமென்றும் தெரிவிக்கப்பட்டது. ஆகவே தன்னை ஆராதிப்பதாகிற புண்யத்தைச் செய்பவர்களையே எம்பெருமான் ஸம்ரக்ஷிக்கிறானென்று

தேறினால் இது க்ருதப்ரதிக்ருதமாயிற்று ; அதாவது உபகாரம் செய்தவர்களுக்கு ப்ரத்யுபகாரம் செய்தபடியாயிற்று. செய்த நன்றிக்குக் கைக்மாறு செய்கையாகிறவிது உலகில் யாவரிடத்திலும் காண்பதொன்றாதலால் இது எம்பெருமானுக்கு ஓரேற்றமாகுமோ ? நிர்ஹேதுகவிஷயீகாரம் செய்வதே தன்னேற்றமாதலால் அபராதிகளையும் ரக்ஷித்துப் பெருமை பெறப் பார்க்கவேணுமே. அப்போதன்றோ க்ஷமாகுணத்தின் வீறு விளங்கும் என்று விஜ்ஞாபித்துத் தம்பக்கலிலே க்ஷமையைக் காட்டியருளும்படி வேண்டினாராயிற்று.

"பவதி சேத்" என்றது—பவத்யேவ என்றபடி. "உச்சைர் கதிர் ஜகதி வித்யதி தர்மதச் சேத்" [சம்பூராமாயணே] என்றவிடத்திற் போல. ... ... (5)

न द्वित्राणि कृतान्यनेन निरयैर्नालं पुनः कल्पितैः पापानामिति मत्कृते तदधिकान् कर्तुं प्रवृत्ते त्वयि ।
तेभ्योऽप्यभ्यधिकानि तान्यहमपि क्षुद्रः करोमि क्षणात् तद्यत्नस्तव निष्फलः खलु भवेत् तत्ते क्षमैव क्षमा ॥ ६ ॥

ந த்வித்ராணி க்ருதாந்யநேந நிரயைர் நாலம் புந: கல்பிதை:
பாபாநாமிதி மத்க்ருதே தததிகாந் கர்த்தும் ப்ரவ்ருத்தே த்வயி,
தேப்யோப்யப்யதிகாநி தாந்யஹமபிக்ஷுத்ர: கரோமி க்ஷணாத்
தத் யத்நஸ் தவ நிஷ்பல: கலு பவேத் தத் தே க்ஷமைவ க்ஷமா. (6)

| | | | |
|---|---|---|---|
| (ரங்கபதே!) | ஸ்ரீரங்கநாதனே ! | க்ஷுத்ர: அஹம் அபி | அற்பனான அடியேனும் |
| அநேந க்ருதாநி (பாபாநி) ந த்வித்ராணி | இப்பையலினால் செய்யப்பட்ட பாபங்களானவை ஸ்வல்பமானவையல்ல ; | க்ஷணாத் | ஒரு நொடிப்பொழுதில் |
| பாபாநாம் கல்பிதை: நிரயை: ந அலம் | (ஆதலால்) பாபங்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற நரகங்கள் போதா ; | தேப்ய: அபி அப்யதிகாநி தாநி | முன்னிலும் அதிகமான பாபங்களையே |
| இதி | என்று கருதி | கரோமி | செய்திடுவேன் ; |
| மத்க்ருதே | அடியேனுக்காக | தத் | ஆகவே |
| தததிகாந் கர்த்தும் த்வயி ப்ரவ்ருத்தே | உள்ள நரகங்களிற் காட்டிலும் அதிகமான நரகங்களை ஸ்ருஷ்டிக்க நீ முயன்றால் | தவ யத்ந: நிஷ்பல: கலு பவேத் | உன்னுடைய முயற்சி பயனற்றதாக வன்றோ ஆய்விடும். |
| | | தத் க்ஷமா ஏவ தே க்ஷமா | ஆனபின்பு க்ஷமிப்பதுதான் உனக்குத் தகுதியானது. |

தம்முடைய பாவங்கள் அளவுகடந்தவை யென்பதையும் ஒருநாளளவிலே ஓய்கின்றனவல்ல என்பதையும் ஒரு சமத்காரமாகச் சொல்லி இவற்றை க்ஷமிப்பது தவிர வேறுவழியில்லை யென்கிறார். பாபபலன்களை அநுபவிப்பதற்காக இப்போது ஸ்ருஷ்டித்திருக்கின்ற நரகங்கள் போதாவென்று எண்ணி இன்னமும் அடியேனுக்காக நரகங்களை தேவரீர் ஸ்ருஷ்டிக்கப் புகுமளவில் அடியேனும் மேன்மேலும் ஓயாது பாபங்களை அளவின்றிச் செய்துகொண்டே போருவேன். தேவரீர் நரகஸ்ஷ்ருடியில் வல்லவரா ? அடியேன் பாபஸ்ருஷ்டியில் வல்லவனா ? என்று ஆராயுமளவில் தேவரீருடைய வல்லமை தாழ்ந்ததாகி அடியேனுடைய வல்லமையே மேன்மைபெற்று ஓங்கி நிற்கும். ஆகவே தேவரீர் வீணாக நரகஸ்ருஷ்டியில் முயல்வதைவிட 'இப்பையல் செய்தபாவங்களை க்ஷமிப்பதே நலம்' என்று திருவுள்ளம்பற்றி நிற்றல் தகும் என்றாராயிற்று. [மத்க்ருதே என்றது அவ்யயம் ; என் பொருட்டு என்றபடி.] ... ... ... ... (6)

संभूयाखिलपातकैर्बहुविधं स्वं स्वं फलं दीयतां सर्वं सह्यमिदं मम त्वयि हरे ! जाग्रत्यपि त्रातरि ।
दुःखाक्रान्तमवेक्ष्य मामिह जनो दुष्टाशयस्त्वद्गुणान् क्षान्त्यादीन् प्रति दुर्वचं यदि वदेत् सोढुं न तच्छक्यते ॥७॥

ஸம்பூயாகிலபாதகைர் பஹுவிதம் ஸ்வம் ஸ்வம் பலம் தீயதாம்
ஸர்வம் ஸஹ்யமிதம் மம த்வயி ஹரே ஜாக்ரத்யபி த்ராதரி,
து:க்காக்ராந்த மவேக்ஷ்ய மாமிஹ ஜநோ துஷ்டாசயஸ் த்வத்குணாந்
க்ஷாந்த்யாதீந் ப்ரதி துர்வசம் யதி வதேத் ஸோடும் ந தத் சக்யதே. (7)

| | | | |
|---|---|---|---|
| ஹரே ! | எம்பெருமானே !, | த்ராதரி த்வயி ஜாக்ரதி அபி மாம் து:க்க ஆக்ராந்தம் அவேக்ஷ்ய | ரக்ஷகனான நீ ஜாகரூகனுக இருக்கவும் என்னை (பாபபலன்களான) துக்கங்களை யநுபவிப்பவனுகக் கண்டு |
| அகிலபாதகை: ஸம்பூய பஹுவிதம் ஸ்வம் ஸ்வம் பலம் தீயதாம் | (நான் செய்த) ஸகலபாபங்களும் ஒன்று சேர்ந்து தாம் தாம் கொடுக்கவேண்டிய பலவகைப்பட்ட பலன்களைத் தாராளமாகவே கொடுக்கட்டும்; | க்ஷாந்திஆதீந் த்வத்குணாந் ப்ரதி | பொறுமை முதலிய உனது திருக்குணங்களைப் பற்றி |
| இதம் ஸர்வம் மம ஸஹ்யம் | இதையெல்லாம் நான் ஸஹித்தேயாக வேண்டும். (ஆனாலும்) | துர்வசம் வதேத் யதி | சொல்லத் தகாத வார்த்தையைச் சொல்லுமாகில் |
| இஹ துஷ்டஆசய: ஜந : | இவ்வுலகில் துர்ப்புத்தியுள்ள ஜனமானது, | தத் ஸோடும் ந சக்யதே | அதுதான் (அடியேனுல்) ஸஹிக்க முடியாதது. |

பிரானே? அடியேன் பலவகைப்பட்டபாவங்களை நிரவதிகமாகச் செய்து போந்திருக்கிறேனுதலால் அவை யெல்லா மொன்றுகூடிப் பலனளித்தே தீரவேண்டும். பாபங்கள் தரும் பலன் துக்கமேயாதலால் பலவகைப்பட்ட துக்கங்கள் அடியேனுக்கு நேர்ந்துதீர வேண்டும். அவற்றை யநுபவிக்க அடியேன் இருய்க்க வொண்ணுமோ? * யத் யத் பவ்யம் பவது பகவந்! பூர்வகர்மாநுரூபம் * என்று சொல்லிக் கொண்டு எதையும் அநுபவிக்க வேண்டியதே; "தன்காய் பொருத கொம்புண்டோ?" என்றபடி எதுவும் ஸஹ்யமேயாகும்; ஆனுல் ஒன்றுமாத்திரமே அடியேனுல் ஸஹிக்க வொண்ணுதது; அது எது வென்னில்; ஸர்வரக்ஷக னென்று பேர் பெற்றிருக்கின்ற நீ ரக்ஷாதீக்ஷிதனுயிருக்கச் செய்தேயும் அந்த ரக்ஷணத்திற்கு நாடுனருவன் இலக்காகாமல் பாபபலன்களான துக்கங்களையே அநுபவித்துக் கொண்டிருந்தேனுகில் இது உன்னுடைய க்ஷமாதி குணங்களுக்கு அவத்யமாகுமன்றோ? உலகில் ரந்த்ராந்வேஷி ஜனங்கள் பலவுண்டே; உனது திருக்குணங்களின்மீது என்ன குற்றங்குறை கூறலா மென்று தேடித் திரிவார் பலருண்டே; அப்படிப்பட்ட துர்ஜனங்கள், நான்துக்காநுபவம் செய்வதே காரணமாக உன்னுடைய க்ஷமை முதலிய திருக்குணங்களின் மீது வாய்கொண்டு சொல்ல வொண்ணுத அவத்யத்தைக் கூறுமே; அது தான் அடியேனுல் ஸஹிக்கப் போகாதது. ஆதலால் அஸஹ்யமான அந்த துக்கத்தை மாத்திரம் உண்டுபண்ணுதொழிய வேணும்—என்று பிரார்த்திக்கும் முகத்தினுல் "அடியேன் மீது க்ஷமை முதலிய குணங்களை ப்ரகாசிக்கச் செய்தருளி அடியேன் செய்த பாபங்களை யெல்லாம் பொறுத்தருளி உலகம் புகழ நிற்கவேணும்" என்று விண்ணப்பஞ் செய்தாராயிற்று.

ஸ்தோத்ர ரத்நத்தில் * அபூதபூர்வம் மம பாவி கிம்வா * என்கிற ச்லோகத்தைத் தழுவி அருளிச் செய்ததாயிற்று இந்த ச்லோகம். இந்த ஜன்மத்திற் செய்தவை, செய்ய வேணு மென்று ஸங்கல்பித்திருப்பவை, ஜந்மாந்தரங்களிற் செய்தவை, * த்விஷந்த : பாபக்ருத்யாம் * என்கிறபடியே அசல் பிளந்தேறிட்டவை முதலான எல்லாப் பாபங்களையும் நினைத்து அகிலபாதகை : என்றது. .... ... ... (7)

क्षान्तिर्नाम वरो गुणस्तव महाञ्छ्रीरङ्गपृथ्वीपते ! सोऽयं सन्नपि सापराधनिवहाभावे न विद्योतते ।
तस्मान्नैकविधापराधकरणे निष्ठावता नित्यशः प्राप्नोत्येष मया प्रकाशमतुलं प्राप्स्याम्यहं च प्रथाम् ॥ ८ ॥

க்ஷாந்திர்நாம வரோ குணஸ் தவ மஹாந் ஸ்ரீரங்கப்ருத்வீபதே
ஸோயம் ஸந்நபி ஸாபராதநிவஹாபாவே ந வித்யோததே,
தஸ்மாந் நைகவிதாபராதகரணே நிஷ்டாவதா நித்யச :
ப்ராப்நோத்யேஷ மயா ப்ரகாசமதுலம் ப்ராப்ஸ்யாம்யஹஞ் ச ப்ரதாம். (8)

| | |
|---|---|
| ஸ்ரீரங்கப்ருத்வீபதே ! | ஸ்ரீரங்கராஜனே ! |
| தவ க்ஷாந்தி: நாம வர: குண: | உனது மிகச்சிறந்த பொறுமையென்னுங் குணமானது |
| மஹாந் | மஹாவைபவம் பொருந்தியது; |
| ஸோயம் ஸந் அபி | இக்குணமானது இராநின்றதே யாகிலும் |
| ஸாபராத நிவஹ அபாவே | அபராதிகளின்கூட்டம் இல்லையாகில் |
| ந வித்யோததே | ப்ரகாசிக்கமாட்டாது ; |
| தஸ்மாத் | ஆதலால் |
| நைகவித அபராத கரணே | பல்வகைக் குற்றங்களையுஞ் செய்வதில் |
| நித்ய ச : நிஷ்டாவதா மயா | அநவரதமும் ஊக்கமுள்ள அடியேனாலே |
| ஏஷ : | இந்த க்ஷமாகுணமானது |
| அதுலம் ப்ரகாசம் ப்ராப்நோதி | ஒப்பற்ற ப்ரகாசத்தை யடைகின்றது ; |
| அஹம் ச | அடியேனும் |
| ப்ரதாம் ப்ராப்ஸ்யாமி | (உனது க்ஷமாகுணத்தை விளங்கச் செய்தவனென்கிற) பெரும் புகழையடையப் போகிறேன். |

குணக்கடலான எம்பெருமானுக்கு எண்ணில்பல் குணங்களிருந்தாலும் அவற்றுள் பொறுமைக்குணமே மிகச்சிறந்தது. இது பெருவயிறுவாய்ந்தது. அபரிமிதமான அபராதிவர்க்கம் இருந்தால்தான் இக்குணம் மிகவிளங்கும்; இல்லையேல் ஒளிமழுங்கும். ஆகவே அபரிமிதமான அபராதங்களைச் செய்வதிலேயே அல்லும்பகலும் ஆவல்கொண்டவனை அடியேனொருவனாலேயே இத்திருக்குணம் மிகவிளக்கமடையக்கடவது. இதனைவிளங்கச் செய்வதனாலுண்டாகும் பெரும்புகழும் எனக்கேஉரித்தாகும்—என்றாயிற்று. **ஸாபராத நிவஹாபாவே** என்றபதத்தில் (ஸாபராத) என்பதை நிவஹத்திற்கு விசேஷணமாக்கி 'அபராதங்களோடு கூடின கூட்டம்' என்று பொருள்கொள்ள நினைப்பது பொருந்தாது. இப்படி ஸமாநாதிகரணமாகவன்றிக்கே "**ஸாபராதாநாம் நிவஹ:**" என்று வ்யதிகரணமாகவே கொள்ளவேணும். கூட்டமென்றபோதே யாருடைய கூட்டமென்று ஆகாங்க்ஷை பிறக்குமாதலால். **ஸாபராதா:** என்றது அபராதிந: என்றபடி. [நைக] ஏகசப்தத்திற்கு நசப்தத்தோடே ஸமாஸமென்றுணர்க. ... ... ... (8)

**मत्पापक्षपणाय योजयसि चेद्घोरेण दण्डेन मां रङ्गाधीश्वर ! केवलाघकरणाद्दु:खं मम स्यान्महत् ।**
**तद्द्रष्टुर्भवतोऽपि दु:खमतुलं घोरं दयालो ! भवेत् तस्मात् तेऽपि सुखाय मत्कृतमिदं सर्वं त्वया क्षम्यताम् ॥ ९ ॥**

மத்பாபக்ஷபணாய யோஜயஸி சேத் கோரேண தண்டேந மாம்
ரங்காதீச்வர கேவலாககரணாத் துக்கம் மம ஸ்யாந் மஹத்,
தத்த்ரஷ்டுர் பவதோபி துக்கமதுலம் கோரம் தயாளோ பவேத்
தஸ்மாத் தேபி ஸுகாய மத்க்ருதமிதம் ஸர்வம் த்வயா க்ஷம்யதாம். (9)

| | |
|---|---|
| தயாளோ ரங்காதீச்வர ! | காருணிகனான ஸ்ரீரங்கநாதனே ! |
| மத்பாப க்ஷபணாய | என்னுடைய பாவங்களைத் தொலைப்பதற்காக |
| கோரேண தண்டேந மாம்யோஜயஸி சேத் | கொடிய தண்டனையோடே என்னைச் சேர்ப்பாயாகில் [என்னைக் கொடுமையாக தண்டிக்கு மளவில்] |
| கேவல அககரணாத் | நான் வெறும் பாவங்களையே செய்திருப்பதனால் |
| மம மஹத் துக்கம் ஸ்யாத் | எனக்கு (அந்த தண்டனையினால்) மஹத்தான துக்கமுண்டாகும். |
| தத் த்ரஷ்டு: பவத: அபி | நான் படும் அந்த துக்கத்தைக் காணப்போகின்றவுனக்கும் |
| அதுலம் கோரம் துக்கம் பவேத் | (தயாளுத்வப்ரயுக்தமாக) ஒப்பற்ற கொடிய துக்கமுண்டாகும் ; |
| தஸ்மாத் | ஆகவே |
| தே அபி ஸுகாய | நீயும் ஸுகப்படுவதற்காக |
| மத்க்ருதம் இதம் ஸர்வம் | நான் செய்துள்ள இந்தப் பாவங்களை யெல்லாம் |
| த்வயா க்ஷம்யதாம் | நீ பொறுப்பது நலம். |

ஸ்ரீரங்கநாதா! அநுபவித்தேதீரவேண்டிய அபரிமிதமான பாபங்களை நான் செய்திருக்கிறேனாதலால் அவற்றைத்தீர்க்கக் கொடியதண்டனைகளோடே என்னைக் கூட்டியேயாக

வேண்டும். அப்போது நான்படும் துயரங்களைக்கண்டு பாதுக்கதுக்கித்வரூபமான தயாகுணமுடைய நீயும் துக்கப்படவேநேரும். இப்படி ஸ்வதுக்கத்தை ஸ்வயமேவவிளைத்துக்கொள்வது நன்றோ? என்குற்றங்களை க்ஷமித்துவிட்டால் நானும் துக்கப்படவேண்டா, நீயும் துக்கப்படவேண்டா. என்னுடைய துக்கம் எப்படியாவது கிடக்கட்டும்; உன்னுடைய ஸுகத்திற்காக க்ஷமிப்பது நலம் என்றாராயிற்று.

மூன்றாவதுபாதத்தில் **தயாளோ:** என்று ஷஷ்டியான பாடமும் காண்கிறது. "தயாளோ: பவத:" என்று அந்வயிக்கும். ஹேதுகர்ப்பவிசேஷணம். ... (9)

**देव त्वां शरणं प्रपन्नमपि मां दुःखान्यनन्याश्रयं बाधन्ते यदि सर्वपापनिवहात् त्वां मोक्षयिष्याम्यहम् ।**
**इत्युक्तं तव वाक्यमर्थविधुरं जायेत यद्वा भवान् तत्राशक्त इति प्रथेत हि ततो मां रक्षतु त्वत्क्षमा ॥ १० ॥**

**தேவ த்வாம் சரணம் ப்ரபந்நமபி மாம் துக்காந்யநந்யாச்ரயம்**
**பாதந்தே யதி ஸர்வபாபநிவஹாத் த்வாம் மோக்ஷயிஷ்யாம்யஹம்,**
**இத்யுக்தம் தவ வாக்யமர்த்தவிதுரம் ஜாயேத யத்வா பவாந்**
**தத்ராசக்த இதி ப்ரதேத ஹி ததோ மாம் ரக்ஷது த்வத்க்ஷமா.** (10)

| | | | |
|---|---|---|---|
| தேவ! | எம்பெருமானே! | அர்த்த விதுரம் ஜாயேத | பொருளற்றதாக ஆய்விடும்; |
| த்வாம் சரணம் ப்ரபந்நம் மாம் அபி | உன்னையே தஞ்சமாகப் பற்றியிருக்கின்ற என்னையும் | யத்வா | அல்லது |
| துக்காநி | துக்கங்களானவை | பவாந் தத்ர அசக்த: இதி ப்ரதேத | நீ அந்த விஷயத்தில் [ஸர்வ பாப மோக்ஷணத்தில்] அசக்தனென்றாவது விளங்கிவிடும்; |
| அநந்யாச்ரயம் (யதாததா) | வேறொரு புகலின்றிக்கே என்னையே பற்றிநின்று | தத: | ஆதலால் |
| பாதந்தே யதி | நலியுமாகில் | த்வத் க்ஷமா | உனது பொறுமைக்குணம் |
| அஹம் த்வாம்ஸர்வ பாபநிவஹாத் மோக்ஷயிஷ்யாமி இதி உக்தம் தவ வாக்யம் | "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று சொன்ன உனது வார்த்தை | மாம் ரக்ஷது | என்னைக் காத்திடுக. |

திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநனை வ்யாஜமாகக்கொண்டு அஸ்மதாதிகளுக்கும் அந்வயிக்கும்படியாக அருளிச்செய்த சரமச்லோகார்த்தம் பழுதுபடாதபடிக்கு அடியேனை க்ஷமைக்கு இலக்காக்கியேயாகவேணுமென்கிறார். பிரானே! * **மாமேகம் சரணம் வ்ரஜ** * என்று கட்டளையிட்டபடியே உன்னையேசரணமாகப்பற்றி நின்றேனடியேன்! இவ்வளவிலும் பாபபலன்கள் என்னைவந்து நலியாநின்றனவே; "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றது பலிக்கப்பெறவில்லையே; இதனால் அந்த சரமச்லோகம் அர்த்தமில்லாத வார்த்தையென்றோ, ஒரு அசக்தன் சொன்னவார்த்தை யென்றோ உலகில் பரவிவிடுமே; இப்படிப்பட்ட அவத்யத்தை ஸம்பாதித்துக் கொள்வதிற்காட்டிலும் "என்னுடம்பிலழுக்கை நானேபோக்கிக் கொள்ளேனோ?" என்றும் "உன்னுடைய பாபங்களை நான் க்ஷமித்தருள நீ சோகிக்கக்கடவையோ?" என்று மருளிச்செய்தபடியே எனதுபாபங்களை க்ஷமித்து என்னைக்காத்தருள்வது நன்று--என்றாராயிற்று. "**அநந்யாச்ரயம்**" என்பதை **மாம்** என்பதற்கு விசேஷணமாகக் கொள்வதும் ஏற்கும். பாதந்தே என்ற க்ரியையிலே விசேஷணமாகக் கொள்வதே ஸ்வரஸம். **ப்ரதேத** என்கிற க்ரியைக்கு **பவாந்** என்பது கர்த்தாவாகவுமாம்; **இதி (அயம்விஷய:)** என்று அத்யாஹரித்துக்கொள்ளக் கூடியதானது கர்த்தாவாகவுமாம். ... ... (10)

**न त्वं क्षाम्यसि चेदिदं मम कृतं नास्त्यत्र काचित्क्षतिः पूर्वं यत्समभूत् तदेव हि पुनर्जायेत तज्जायताम् ।**
**यद्वा स्यादधिकं च सोऽपि सुमहान् लाभोऽस्तु मे तादृशः स्वामिन् ! दासजनस्तवायमधिकं स्वैरेण दूरीभवेत् ॥**

ந த்வம் க்ஷாம்யஸி சேதிதம் மம க்ருதம் நாஸ்த்யத்ர காசித் க்ஷதி:
பூர்வம் யத் ஸமபூத் ததேவ ஹி புநர் ஜாயேத தஜ்ஜாயதாம்,
யத்வா ஸ்யாததிகஞ் ச ஸோபி ஸுமஹாந் லாபோஸ்து மே தாத்ருச:
ஸ்வாமிந் தாஸஜநஸ் தவாயமதிகம் ஸ்வைரேண தூரீபவேத். (11)

| | | | |
|---|---|---|---|
| ஸ்வாமிந் | எம்பெருமானே ! | யத் வா அதிகம் ச ஸ்யாத் | அல்லது முன்னிலும் அதிகமாகவே நேர்ந்தாலும் நேரட்டும் ; |
| மம க்ருதம் இதம் த்வம் ந க்ஷாம்யஸி சேத் | என்னுடைய செய்கையான இந்த பாபத்தை நீ க்ஷமியாதொழியில் | ஸ: அபி மே ஸுமஹாந் லாப: அஸ்து | அதுவும் எனக்குப் பெரியலாபமாகவே ஆயிடுக ; |
| அத்ர காசித் க்ஷதி: நாஸ்தி | இதில் யாதொரு ஹாநியுமில்லை. | தாத்ருச: அயம் தவ தாஸஜந: | அப்படிப்பட்ட இந்த உனது தாஸஜன்மானது |
| பூர்வம் யத் ஸமபூத் | இதுவரையில் பாப பலனாக என்ன நேர்ந்ததோ | அதிகம் | மிகவும் |
| தத் எவ ஹி புந: ஜாயேத | அதுவே யன்றோ மீண்டு மீண்டும் நேரப்போகிறது ; | ஸ்வைரேண | யதேஷ்டமாக |
| தத் ஜாயதாம் | அது தாராளமாக நேரட்டும் ; | தூரீபவேத் | விலகி அகன்றொழியும். |

எம்பெருமானே! நான்செய்த குற்றங்களை சரமச்லோகத்தின்படியே க்ஷமித்தருளாமல் * கல்பகோடி சதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே! * என்றபடி நிக்ரஹத்திற்கே இலக்காக்குமளவில் அடியேனுக்கு ஹாநியொன்றுமில்லை ; தேவரீருக்கே மிகுந்த ஹாநியாகுமென்பது பரமதாற்பரியம். அதுவே மேல்மூன்று பாதங்களினால் மூதலிக்கப்படுகிறது. * அபூதபூர்வம் மம பாவி கிம்வா * என்றபடி இதுவரையில் நேராத பாபபலன் எனக்கினி அபூர்வமாக என்ன நேரிடப்போகிறது ? நேர்ந்த துக்கங்களேமாறிமாறி நேரப்போகின்றன ; அபூர்வமாக அளவுகடந்ததுக்கங்கள் நேர்ந்தாலும் நேரட்டுமே, நமக்குக்கிடைக்கிற பொருள் அதிகமாகவே கிடைத்தால் அதனைப்பெருத்த லாபமாகவே கொள்ளுங்கணக்கிலே நானும் கொள்ளக்கடவேன். எனக்கு லாபமென்பது மாத்திரமேயன்றி உனக்குப்பெருத்த நஷ்டமென்பதும் குறிக்கொள்ளத்தக்கது. நான்உனது திருவடிகளைச் சார்ந்தவனாகாமே அகன்றொழியவன்றோ நேரும். அது உனக்கு நஷ்டமன்றோ. ஆகவே உன்சரக்கு தப்பிப்போகாமே நோக்கிக்கொள்ளப்பாராய் என்றதாயிற்று. ... ... (11)

सोऽहं क्षुद्रतया जुगुप्सिततमं दुष्कर्म नित्यं स्मरन् कुर्वन् काममशुद्धरीतिरभवं श्रीरङ्गपृथ्वीपते ! ।
एतत्ते महतो विशुद्धमनसा स्मर्तुं न युक्तं खलु क्षान्त्या विस्मर तत्ततोऽहमसुखान्मुक्तो भवेयं सुखी ॥ १२ ॥

ஸோஹம் க்ஷுத்ரதயா ஜுகுப்ஸிததமம் துஷ்கர்ம நித்யம் ஸ்மரந்
குர்வந் காமமசுத்தரீதிரபவம் ஸ்ரீரங்கப்ருத்வீபதே,
ஏதத் தே மஹதோ விசுத்தமநஸா ஸ்மர்த்தும் ந யுக்தம் கலு
க்ஷாந்த்யா விஸ்மர தத் ததோஹமஸுகாந் முக்தோ பவேயம் ஸுகீ. (12)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கப்ருத்வீபதே | ஸ்ரீரங்கராஜனே ! | ஏதத் | இந்நிலைமையானது |
| | | மஹத: தே | மஹானானவுனக்கு |
| ஸோஹம் | பழைய நான் | விசுத்த மநஸா ஸ்மர்த்தும் ந யுக்தம் கலு | பரிசுத்தமான திருவுள்ளத்தினால் ஸ்மரிக்கத் தகாததன்றோ ; |
| க்ஷுத்ரதயா | நீசனாகையாலே | | |
| ஜுகுப்ஸிததமம் துஷ்கர்ம | மிகவும்வெறுக்கத்தக்க துஷ்கர்மத்தை | தத் க்ஷாந்த்யா விஸ்மர | அதனை க்ஷமாகுணத்தினால் மறந்துவிடுக; |
| நித்யம் ஸ்மரந் | இடைவிடாது சிந்தித்துக்கொண்டு | தத: | அப்படி மறக்குமளவில் |
| காமம் குர்வந் | (அதை) மனம்போனபடி செய்துகொண்டு | அஹம் அஸுகாத் முக்த: | அடியேன் துக்கத்தினின்றும் விடுபட்டு |
| அசுத்தரீதி: அபவம் | அசுத்தமான தன்மையையுடையவனாக ஆயினேன் ; | ஸுகீ பவேயம் | ஆனந்த சாலியாக ஆவேன். |

தம்முடைய பாபங்களை க்ஷமிக்கவேவேண்டுமென்பதற்கு ரஸோக்தியாக ஒரு ஹேதுவை விண்ணப்பஞ்செய்கிறாரிதில். ஸ்ரீரங்கநாதனே ! பாபங்களைச் செய்த நான் அவற்றைச் செய்யும்போதும் அதற்குப்பூர்வாங்கமாக அதைப்பற்றி ஸங்கல்பிக்கும் போதும் அவற்றை நெஞ்சால் நினைக்கவேண்டுகையாலே நினைத்து மிகவும் அசுத்திபெற்றவனாயினேன். * நீசனேன்நிறையொன்று மிலேனென்றிருக்கு மடியேனுக்கு இது தகும். என்னை நீதண்டிக்க வேண்டில் இப்படிநான் செய்த பாவங்களை யெல்லாம் எண்ணியெண்ணியன்றோ தண்டிக்க வேண்டும். அப்படியெண்ணுவதுதானும் உனக்கு அவத்யாவஹமன்றோ ? க்ஷுத்ரனானவெனக்கு இது தகுமாயினும் மஹானானவுனக்கு இதுதகாதன்றோ. ஆகவே தண்டனைக்காகவாகிலும் என்குற்றங்களை ஸ்மரித்து அவத்யம் பெறுவதிற்காட்டிலும் க்ஷாந்தியினால் அவற்றை அறவே மறந்துவிடுவது நலம். இது நம்மிருவர்க்கும் க்ஷேமாயவாகிறது என்றாராயிற்று. (12)

... ... ...

तत्तत्कर्मफलानुरूपमखिलो लोकस्त्वया सृज्यते तस्मात्कर्मवशंवदत्वमधिकं वक्तुं तवापि क्षमम् ।
श्रीरङ्गेश्वर ! तत्प्रशान्तिविधये क्षान्त्या निराकृत्य मे सर्वं पातकमाशु दर्शय भवत्स्वातन्त्र्यमत्युज्ज्वलम् ॥ १३ ॥

தத்தத்கர்மபலாநுருபமகிலோ லோகஸ் த்வயா ஸ்ருஜ்யதே
தஸ்மாத் கர்மவசம்வதத்வமதிகம் வக்தும் தவாபி க்ஷமம்,
ஸ்ரீரங்கேச்வர தத்ப்ரசாந்திவிதயே க்ஷாந்த்யா நிராக்ருத்ய மே
ஸர்வம் பாதகமாசு தர்சய பவத்ஸ்வாதந்த்ர்யமத்யுஜ்ஜ்வலம். (13)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேச்வர | ஸ்ரீரங்கநாதனே ! | தத்ப்ரசாந்தி விதயே | அந்த கர்மபாரதந்த்ரியம் குலைவதற்காக |
| அகில: லோக: | எல்லாவுலகமும் | மே ஸர்வம் பாதகம் | எனது ஸகலபாபங்களையும் |
| தத்தத்கர்ம பல அநுரூபம் | அந்தந்த கருமபலன் களுக்குத் தகுதியாக | க்ஷாந்த்யா நிராக்ருத்ய | பொறுமையினால்தள்ளி |
| த்வயா ஸ்ருஜ்யதே | உன்னால் படைக்கப்படுகிறது; | பவத் ஸ்வாதந்த்ர்யம் | உனது ஸ்வாதந்திரியத்தை |
| தஸ்மாத் | ஆதலால் | அத்யுஜ்ஜ்வலம் | மிக்கபுகர்பெற்றதாக |
| கர்மவசம்வதத்வம் | கர்மபாரதந்த்ரியமானது | ஆசு தர்சய | சீக்கிரம் காட்டியருளவேணும். |
| அதிகம் | அதிகமாக | | |
| தவ அபி வக்தும் க்ஷமம் | உனக்கும் சொல்ல ப்ராப்தமாகும். | | |

ஸ்ரீரங்கநாதனே! ஸம்ஸாரிகளான நாங்களே கருமங்களுக்கு வசப்பட்டவர்களென்றும் நீ அப்படிப்பட்டவனல்லாத ஸ்வதந்த்ர னென்றும் ப்ரஸித்தியிருந்தும் நீயும் கர்மபாரதந்த்ரனாகக் காணுகின்றாய்; எங்ஙனேயென்னில்; * வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் * என்ற ஸூத்ரத்தின்படி அவரவர்கள் செய்த கருமங்களுக்கு வசப்பட்டே ஸ்ருஷ்டிகளைச் செய்துபோராநின்றபடியினாலே கர்மபாரதந்திரியம் உனக்குத் தவிர்க்கவொண்ணாததாயிற்று. இது ஸ்ருஷ்டிவிஷயத்தில் மாத்திரமன்றே. ஸ்ருஷ்ட்யுபலக்ஷிதமான லோகநிர்வாஹம் முழுவதிலும் இங்ஙனேயன்றோ, இப்படி இந்தகர்மபாரதந்த்ரியமே ஓங்குமளவில் உன்னுடைய ஸ்வாதந்திரியம் புகரழிந்துபோமே ; இது தகுதியன்றே. ஆதலால் அடியேனுடைய கருமங்களுக்குத் தகுந்தபலனைக் கொடுப்பதென்கிற வழியில்நின்று ஸ்வாதந்திரியத்தையிழந்து கர்மபாரதந்திரியமாகிற அபக்யாதியை ஸம்பாதிக்கத்திருவுள்ளம் பற்றாமல் அடியேனுடைய பாபங்களையெல்லாம் க்ஷமித்தருள்வதுநன்று என்றாராயிற்று. (13)

श्रीरङ्गेश ! वचो मदीयमधुना व्यक्तं त्वया श्रूयतां पुण्यं तत्फलसङ्गमात्रविरहाद्भूयो न मां प्राप्नुयात् ।
पापं नैव तथा, फलं वितनुते, शक्यं न तद्वारणं तत्क्षान्त्या तव शक्यमेव तदियं सद्यस्त्वया कल्प्यताम् ॥ १४ ॥

ஸ்ரீரங்ககேச வசோ மதீயமதுநா வ்யக்தம் த்வயா ச்ரூயதாம்
புண்யம் தத்பலஸங்கமாத்ரவிரஹாத் பூயோ ந மாம் ப்ராப்நுயாத்,
பாபம் நைவ ததா,பலம் விதநுதே,சக்யம் ந தத்வாரணம்
தத் க்ஷாந்த்யா தவ சக்யமேவ ததியம் ஸத்யஸ் த்வயா கல்ப்யதாம். (14)

| | |
|---|---|
| ஶ்ரீரங்கேச! | ஸ்ரீரங்கநாதனே !, |
| அதுநா | இப்போது |
| மதீயம் வச: | அடியேனுடையதான வார்த்தையொன்று |
| த்வயா வ்யக்தம் ச்ரூயதாம் | உன்னால் நன்றாகக் கேட்கப்படவேண்டும்; |
| | (அது யாதெனில்) |
| புண்யம் | புண்யமானது |
| தத் பல ஸங்க மாத்ர விரஹாத் | அதனுடைய பலனை விரும்பாதவளவில் |
| பூய: மாம் ந ப்ராப்நுயாத் | பெரும்பாலும் அது என்னை வந்துசேராது ; |
| பாபம் (து) ததா நைவ | பாபமோவென்றால் அப்படியன்று ; |
| பலம் விதநுதே | (அதன்பலனை விரும்பாமற்போனாலும்) பாபமானது பலனை விளைத்தேதீரும் ; |
| தத் வாரணம் ந சக்யம் | அதனைத்தடுப்பது அஸாத்யம் ; |
| தத் தவ க்ஷாந்த்யா சக்யம் எவ | அப்படிதடுப்பதானது உன்னுடைய க்ஷமாகுணத்தினால் ஸாத்யமேயாகும் ; |
| தத் இயம் ஸத்ய: த்வயா கல்ப்யதாம் | ஆகவே இந்த க்ஷாந்தியானது உடனே உன்னால் செய்யப்படட்டும். |

புண்யத்திற்கும் பாபத்திற்கும் பலனளிக்கும் விஷயத்திலே ஒரு வாசியுண்டு ; அதாவது, புண்யம் செய்பவர்கள் அதன்பலனை விரும்பினால்தான் அதுவந்தடையும் ; விரும்பாதவளவில் அது அணுகாது. பாபமோவென்னில் அப்படிப்பட்டதல்ல; பாபபலனை விரும்பாமலே நான் பாபத்தைச் செய்கிறேனென்றாலும் அதன்பலன் வந்தேதீரும். ஆகவே அடியேன் செய்தபாவங்களுக்குப்பலனை துக்காநுபவங்கள்தவிரா; 'பாபங்களை நான் பொறுத்துவிட்டேன்' என்று நீ நினைப்பிடுமளவில் பாபங்களானவை பலன்கொடுக்க மாட்டாவாதலால் அந்தக்ஷாந்தியைச் செய்தருளவேணுமென்று பிரார்த்திக்கிறேனென்றாயிற்று.

["புண்யஸ்ய பலமிச்சந்தி புண்யம் நேச்சந்தி மாநவா:, நபாபபலமிச்சந்தி பாபம் குர்வந்தி ஸந்ததம்."] புண்யத்தின்பயனை ஸுகாநுபவத்தில்மாத்திரம் உலகர் விருப்பங்கொள்ளுகிறார்கள் ; ஆனால் ஸாதனமாகிய புண்யத்தைச் செய்வதில்லை. பாபபலனை துக்காநுபவத்தில் விருப்பமற்றிருக்கச் செய்தேயும் தத்ஸாதனமான பாபத்தை மாத்திரம் இடைவிடாது செய்துபோருகின்றனர்—என்றபடியே அடியேன் செய்த பாவங்களுக்கு தேவரீருடைய க்ஷமையல்லது புகலில்லையென்றாயிற்று. தத்பலஸங்கமாத்ரவிரஹாத் என்றது—விரஹேஸதி என்றபடி. ... .... .... (14)

श्रीरङ्गेश्वर ! पुण्यपापफलयोः स्वाधीनतां कुर्वतोः सर्वेषां सुखदुःखयोः स्वयमहं मग्नाशयो मामपि ।
स्मर्तुं न प्रभवामि किं पुनरहो त्वामन्तरन्तः स्थितं तत्ते त्वं क्षमया निरस्य कुरु मे त्वद्ध्यानयोग्यां दशाम् ॥१५॥

ஸ்ரீரங்கேச்வர புண்யபாபபலயோஸ் ஸ்வாதீநதாம் குர்வதோ:
ஸர்வேஷாம் ஸுகதுக்கயோஸ் ஸ்வயமஹம் மக்நாசயோ மாமபி,
ஸ்மர்த்தும் ந ப்ரபவாமி கிம் புநரஹோ த்வாம் அந்தரந்தஸ் ஸ்திதம்
தத் தே த்வம் க்ஷமயா நிரஸ்ய குரு மே த்வத்த்யாநயோக்யாம் தசாம். (15)

| | |
|---|---|
| ஸ்ரீரங்கேச்வர ! | ஸ்ரீரங்கநாதனே !, |
| ஸர்வேஷாம் | (உலகில்) எல்லாரையும் |
| ஸ்வாதீநதாம் குர்வதோ : | தம் வசப்படுத்திக் கொள்ளுகின்ற |
| புண்ய பாப பலயோ : ஸுக துக்கயோ : | புண்யபாவங்களின் பலனை இன்பதுன்பங்களில் |
| ஸ்வயம் மக்ந ஆசய : அஹம் | ஸ்வயமாகவே யீடுபட்டிருக்கின்ற அடியேன் |
| மாம் அபி ஸ்மர்த்தும் ந ப்ரபவாமி | என்னையே ஸ்மரிக்க சக்தியற்றவனா யிருக்கின்றேன் ; |
| அந்த : அந்த : ஸ்திதம் த்வாம் (ஸ்மர்த்தும்) கிம் புந: | உள்ளுக்குள்ளே பதிந்து கிடக்கிற உன்னை ஸ்மரிக்ககில்லேனென்பது பற்றிச் சொல்லவும் வேணுமோ ? |
| தத் | அந்த அசக்தியை |
| த்வம் | நீ |
| தே க்ஷமயா நிரஸ்ய | உன்னுடைய பொறுமையினால் போக்கி |
| த்வத் த்யாந யோக்யாம் தசாம் மே குரு | உன்னையே சிந்திப்பதற்குரிய நிலைமையை எனக்கு உண்டாக்கி யருளவேணும். |

உலகத்தவர்கள் புண்யமோபாபமோ இரண்டிலொன்றைச் செய்துதீரவேண்டும். புண்யம்செய்தால் அதன்பலனான ஸுகாநுபவத்திலே யீடுபடநேர்கின்றது. பாபம்செய்தால் அதன்பலனான துக்காநுபவத்திலே யீடுபடநேர்கின்றது. அப்போது ஸ்வாத்மாவையே மறந்து கிடக்கவேண்டிய தாகின்றது. இப்படி யாவரையும் தன்வசத்திலிழுக்கின்ற புண்யபாப பலன்களான இன்பதுன்பங்களில் ஈடுபட்டு ஸ்வாத்மாவையே மறந்திருக்கின்ற அடியேன் நிலைகாண வொண்ணாதவிடத்திலே பதிந்துகிடக்கின்ற தேவரீரை ஸ்மரிக்க ப்ரஸக்திலேசமுமில்லையே ; இங்ஙனே அடியேன்பாழ்பட்டுப் போகலாமோ ? தேவரீருடைய க்ஷமாகுணத்தினால்—அடியேன் கருமபலன்களுக் கீடுபட்டு தேவரீரை மறந்திருக்குமிருப்பைத் தவிர்த்து தேவரீரைச் சிந்திக்கவல்லேனாம்படி செய்தருளவேணு மென்றாராயிற்று. ... (15)

अल्पं चेदनवेक्षणीयसरणावारोप्यतां मत्कृतं किञ्चिद्भूरि भवेदिदं यदि गुरून् संप्रेक्ष्य मे त्यज्यताम् ।
यद्वाऽनन्तमनन्तवैभवजुषो रङ्गक्षमावल्लभ ! त्वत्क्षान्त्याः खलु लक्ष्यतामनुगुणामानीयतां तत्त्वया ॥ १६ ॥

அல்பஞ்சேதநவேக்ஷணீயஸரணாவாரோப்யதாம் மத்க்ருதம்
கிஞ்சித் பூரி பவேதிதம் யதி குரூந் ஸம்ப்ரேக்ஷ்ய மே த்யஜ்யதாம்,
யத்வாநந்தமநந்தவைபவஜுஷோ ரங்கக்ஷமாவல்லப
த்வத்க்ஷாந்த்யா: கலு லக்ஷ்யதாமநுகுணாமாநீயதாம் தத் த்வயா. (16)

| | | | |
|---|---|---|---|
| ரங்கக்ஷமாவல்லப ! | ஸ்ரீரங்கபூபதியே !, | த்யஜ்யதாம் | விடப்படட்டும். |
| மத் க்ருதம் | நான் செய்த பாவமானது | யத்வா அநந்தம் யதி | (என்னுடைய பாபம்) அளவு கடந்ததாக இருக்குமாகில் |
| அல்பம் சேத் | (தேவரீர் திருவுள்ளத்தினால்) சிறிதாகத் தோற்றுமாகில் | தத் | அந்தப்பாபமானது |
| அநவேக்ஷணீய ஸரணௌ ஆரோப்யதாம் | காணாக்கண்ணிட்டிருக்க வேணும் ; | அநந்த வைபவ ஜுஷ: | அபரிமிதமான வைபவம் வாய்ந்த |
| இதம் | நான் செய்தபாவமானது | த்வத் க்ஷாந்த்யா: | தேவரீருடைய க்ஷமாகுணத்திற்கு |
| கிஞ்சித் பூரி பவேத் யதி | சிறிது அதிகமாகத் தோற்றுமானால் | அநுகுணம் லக்ஷ்யதாம் த்வயா ஆநீயதாம் | பொருத்தமான இலக்காயிருக்குந்தன்மையை தேவரீரால் அடைவிக்கப்படட்டும். |
| மே குரூந் ஸம்ப்ரேக்ஷ்ய | அடியேனுடைய ஆசிரியர்களைக் கடாக்ஷித்து | | |

அடியேன் செய்தபாவங்கள் உண்மையில் அளவுகடந்தவையேயானாலும் தேவரீர் திருவுள்ளத்தால் ஒருகால் அவை அற்பமாகத் தோன்றினால் இது வொரு பொருளோ வென்று இகழ்ந்து காணாக்கண்ணிட்டிருக்கவமையும்; அங்ஙனன்றிக்கே அடியேன் செய்த பாவங்கள் சிறிது பெரியனவாகத் தோன்றினால் *பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா * என்கிறபடியே அடியேனுடைய ஆசிரியர்களைக் கடாக்ஷித்து அவர்களுடைய குடல்துடக்குடையனன்றோவிவன்! என்று கொண்டு அவர்களுக்காக விட்டுத் தொலைக்கவமையும். அங்ஙனுமன்றிக்கே அடியேன் செய்தபாபங்கள் அபரிமிதங்களாகவே திருவுள்ளத்தில் தோன்றுமாகில், எப்படிப்பட்ட குற்றங்களையும் பொறுக்கவல்ல பெருமைவாய்ந்த தேவரீருடைய க்ஷமாகுணத்திற்குத் தகுந்த இலக்காக்கியருளவமையும். ஆகவே, எந்த விதத்திலும் அடியேனுடைய பாபங்கள் அடியேனை தேவரீர் நிக்ரஹிக்கைக்கு உறுப்பாக வொண்ணாதென்று விஜ்ஞாபித்தாராயிற்று. ... ... (16)

संत्यक्तसर्वविहितक्रियमर्थकामश्रद्धालुमन्वहमनुष्ठितनिन्द्यकृत्यम् ।
अत्यन्तनास्तिकमनात्मगुणोपपन्नं मां रङ्गराज ! परया कृपया क्षमस्व ॥ १७ ॥

ஸம்த்யக்தஸர்வவிஹிதக்ரியம் அர்த்தகாமச்ரத்தாளும் அந்வஹமநுஷ்டிதநிந்த்யக்ருத்யம்,
அத்யந்தநாஸ்திகமநாத்மகுணோபபந்நம் மாம் ரங்கராஜ பரயா க்ருபயா க்ஷமஸ்வ. (17)

| | | | |
|---|---|---|---|
| ரங்கராஜ ! | ஸ்ரீரங்கநாதனே !, | | |
| ஸம்த்யக்த ஸர்வ விஹித க்ரியம் | சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட எல்லாக் காரியங்களையும் அறவே விட்டவனையும் | அத்யந்த நாஸ்திகம் | மிகவும் நாஸ்திகனையும் |
| அர்த்த காம ச்ரத்தானும் | அர்த்தகாமங்களிலேயே ஊற்றமுள்ளவனையும் | அநாத்மகுண உபபந்நம் மாம் | தீய குணங்கள் நிரம்பினவனையுமிருக்கிற அடியேனை |
| அந்வஹம் அநுஷ்டித நிந்த்ய க்ருத்யம் | சாஸ்த்ரங்களில் கர்ஹிக்கப்பட்ட தீவினைகளையே நிச்சலும் செய்து போருமவனையும் | பரயா க்ருபயா | பரம க்ருபையினாலே |
| | | க்ஷமஸ்வ | க்ஷமித்தருளவேணும். |

श्रीमान् कूरान्ववाये कलशजलनिधौ कौस्तुभाभोऽवतीर्णः श्रीवेदव्यासभट्टारकतनयवरो रङ्गराजस्य हृद्यः ।
वेदाचार्याग्र्यनामा विदितगुणगणो रङ्गिणः स्तोत्रमेतत् चक्रे नित्याभिजप्यं सकलतनुभृतां सर्वपापापनुत्त्यै ॥

ஸ்ரீமாந் கூராந்வவாயே கலசஜலநிதௌ கௌஸ்துபாபோவதீர்ண:
ஸ்ரீவேதவ்யாஸபட்டாரகதநயவரோ ரங்கராஜஸ்ய ஹ்ருத்ய:,
வேதாசார்யாக்ர்யநாமா விதிதகுணகணோ ரங்கிணஸ் ஸ்தோத்ரமேதத்
சக்ரே நித்யாபிஜப்யம் ஸகலதநுப்ருதாம் ஸர்வபாபாபநுத்த்யை:
(இது இந்த ஸ்தோத்ரகர்த்தாவின் சிஷ்யர்களிலொருவர் பணித்தது.)

| | | | |
|---|---|---|---|
| கூராந்வவாயே கலச ஜலநிதௌ | கூரகுலமாகிற பாற்கடலிலே | ஸ்ரீமாந் வேதாசார்யாக்ர்ய நாமா | ஸ்ரீவேதாசார்யபட்டரென்பவர் |
| கௌஸ்துபாப: அவதீர்ண: | கௌஸ்துபமணிபோல் அவதரித்தவரும் | ரங்கிண: ஸ்தோத்ரம் ஏதத் | ஸ்ரீரங்கநாதன் விஷயமான ஸ்தோத்ரமாகிய இந்த க்ஷமாஷோடசியை |
| ஸ்ரீ வேதவ்யாஸ பட்டாரக தநய வர: | ஸ்ரீவேதவ்யாஸ பட்டருடைய திருக்குமாரரும் | ஸகல தநுப்ருதாம் | ஸமஸ்த ப்ராணிகளுக்கும் |
| ரங்கராஜஸ்ய ஹ்ருத்ய: | ஸ்ரீரங்கநாதனுக்குத் திருவுள்ளமுகந்தவரும் | ஸர்வ பாப அபநுத்த்யை | ஸகலபாபங்களும் தீருகைக்கு |
| விதித குணகண: | ஜகத்ப்ரஸித்தமான திருக்குணத்திரள்களையுடையவருமான | நித்ய அபிஜப்யம் | நித்யமும் அநுஸந்திக்கத்தக்கதாக |
| | | சக்ரே | அருளிச்செய்தார். |

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய

# க்ஷமாஷோடசியுரை

முற்றுப்பெற்றது.

ரத்னம் அச்சுக்கூடம், மதராஸ். 11, பத்திரையன் தெரு, ஜி. டி. மதராஸ்.

# ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய புத்தகங்களின் ஜாபிதா.

## ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளின் பதிப்பு.

ரூ. அ.

### திவ்யப்ரபந்த வியாக்கியானங்கள்

1. திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழி திருப்பாவை நாச்சியார் திருமொழி பெருமாள் திருமொழி திருச்சந்த விருத்தம் திருமாலை திருப்பள்ளியெழுச்சி அமலனுதிபிரான் கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆகிய இவற்றின் உரை=முதலாயிரம் ... 10—0
2. திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழி பொழிப்புரை .... 1—0
3. திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரியதிருமொழியாயிரம் திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகமுட்பட ... 12—0
4. நான்கு திருவந்தாதிகள் திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவெழுகூற்றிருக்கை சிறியதிருமடல் பெரிய திருமடல் இராமாநுசநூற்றந்தாதி ஆகிய இயற்பா ஆயிரம் ... 10—0
5. நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியாயிரத்தில் 700 பா. 7—0 (மேலே அச்சிலுள்ளது)
6. உபதேசரத்தினமாலை திருவாய்மொழிநூற்றந்தாதி உரை ... 1—0
7. ஆர்த்திப் பிரபந்தவுரை ... 0—8
8. நித்யாநுஸந்தானம் உரை ... 2—8

ரூ. அ.

### ஸ்தோத்ரபாட வியாக்கியானங்கள்

9. முகுந்தமாலை, ஆளவந்தார் ஸ்தோத்ரம் சதுச்லோகி, ஸ்ரீஸ்தவம், யதிராஜவிம்சதி, தேவராஜாஷ்டகம், தேவராஜ மங்களம்—உரையுடன் ... 2–10
10. பஞ்சஸ்தவே— வரதராஜஸ்தவவுரை ... 1—0
11. ,, அதிமாநுஷஸ்தவவுரை ... 0–12
12. ஸுதர்சநசதக வியாக்கியானம். 1—0
13. ஸ்ரீரங்கராஜஸ்தவவுரை. (1) ... 1—8
14. அஷ்டச்லோகி உரை ... 0—8
15. தேசிகஸ்தோத்ரங்களில் ஹயக்ரீவஸ்தோத்ரம், வைராக்ய பஞ்சகம், கோதாஸ்துதி, பரமார்த்தஸ்துதி, தேசிகமங்களம் உரை 1—8
16. ஸ்ரீரங்கநாதஸ்தோத்ரம், க்ஷமாஷோடசி, ஸ்ரீவேங்கடேசஸ்தோத்ரம் முதலியன-உரை ... 1—0

### ரஹஸ்யக்ரந்தங்கள்.

17. முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசநபூஷணம் மூலம் ... 0—8
18. முமுக்ஷுப்படிஸாரம், ஸ்ரீவசநபூஷணஸாரம். ... 3—0
19. ஆசார்யஹ்ருதயஸாரம் (விரிவு).... 4—0
20. ஷை (சுருக்கம்) ... 1–10
21. ரஹஸ்யார்த்த வினுவிடை ... 0—6

இன்னமும் பலபல புத்தகங்களுக்கு கியாடலாக் தருவித்துப்பார்க்க.

இவை கிடைக்குமிடம்:—

**க்ரந்தமாலா ஆபீஸ்,**

29. தெற்குமாடவீதி, காஞ்சீபுரம்

ஸ்ரீ:

# சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் அறிக்கை.

இந்த ஸபை ஆரம்பித்து ஒரு வருஷமாகிறது. ஸபையின் நோக்கப்படி காரியங்கள் ஒழுங்காக நடந்துவருகின்றன. தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் ஒரு வருஷத்திற்கு வெளிவரவேண்டிய புத்தகங்கள் பூர்த்தியாக வெளிவந்துவிட்டன. தமிழ் வெளியீடுகளைப் பற்றி மாத்திரம் இங்குத் தெரிவிக்கப்படுகிறது.

1. **குருபரம்பரா ப்ரபாவமென்கிற பூர்வாசார்ய வைபவம்.** சிறிய ஸைஜ் பக்கம் 156. [பெரிய ஸைஜ் அளவுக்கு பக்கம் 78].

2, 4. **ஆசார்யஹ்ருதய ஸாரம்.** இது இரண்டு பகுதியாக வெளியிடப் பட்டது. இரண்டாவது நம்பராகவும் நான்காவது நம்பராகவும். [பெரிய ஸைஜ் பக்கம் 228.]

3. **திவ்யப்ரபந்த ஸாரத்திரட்டு.** சிறிய ஸைஜ் பக்கம் 80. [பெரிய அளவு பக்கம். 40.]

5. **பன்னிரு திங்களநுபவம்.** பெரிய ஸைஜ் பக்கம் 132.

6. **நித்யாநுஸந்தானம் மூலம்.** சிறியஸைஜ் பக்கம் 120. [பெரிய ஸைஜ் அளவுக்கு பக்கம் 60.]

7. **நித்யாநுஸந்தாநம் உரை.** [பெரிய ஸைஜ் பக்கம் 176.]

ஆக பெரிய ஸைஜ் பக்கங்கள் மொத்தம்.— 714. ஸபையின் நிபந்தனையில் வருஷம் 1-க்கு பெரிய ஸைஜ் பக்கம் 600-க்குக் குறையாமல் வெளியிடவேணுமென்றுள்ளது. 600 பக்கங்களுக்குமேல் 114 பக்கம் அதிகமாகவே இவ்வருஷம் அச்சிடப்பட்டிருக்கின்ற தென்பதை நண்பர்கள் கவனிக்க வேணும்.

திருவாய்மொழிக்கு வியாக்கியானமான **நம்பிள்ளையீடு** என்கிற பகவத்விஷயம் தமிழ் லிபியில் தற்காலம் கிடைப்பது அரிதாயிருப்பதால் இது தனிப்பட்ட ஸ்ரீ கோசமாக வெகு அழகான முறையில் அச்சிடப்பட்டு வருகிறது. இது அடுத்த அக்டோபர் மாதத்திலிருந்து வெளிவரும். அது இரண்டாவது வருஷத்தின் கணக்கில் சேரும். இந்த ஸபையின் நிர்வாஹத்திற்குப் போதுமான சந்தாதாரர்கள் இதுவரையில் சேரவில்லை. இந்த ஸபையைப் பற்றி அதிகமாகப் பிரசாரம் செய்யாமையே இதற்குக் காரணமென்று ஊஹிக்கப் படுகிறது. நமது தமிழ் நாடுகளிலெல்லாம் சென்று இதைப்பற்றிப் பிரசாரம் செய்வதற்குத் தகுந்த யோக்யதையுள்ள ஏஜண்டுகள் தேவை.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் அபிமானமுள்ள மஹான்கள் யாவரும் இந்த ஸபையில் அந்வயித்து இதனை அபிவிருத்திக்குக் கொண்டுவரவேணுமென்று பிரார்த்திக்கப் படுகிறது.

(1) ஸ்ரீமான் கராலபாடி ராதாகிருஷ்ணய்யா, (147 அண்ணுபிள்ளைத் தெரு, ஜி. டி மதராஸ) (2) ஸ்ரீமான் V. R. எதிராஜம் செட்டி (c/o ஸௌத் இண்டியன் எக்ஸ்போர்ட்டு கம்பெனி, போஸ்ட் பாக்ஸ் நெ. 37, மதராஸ்) இவ்விருவரும் இந்த ஸபையின் முன்னேற்றத் திற்காக மிகவும் பாடுபடுகிறவர்கள். அபிமானிகள் தங்களுடைய விருப்பங்களை இவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளலாம்.

இப்படிக்கு,

**காஞ்சிபுரம் P. B. அண்ணங்கராசாரியர்,**

(ஷை ஸபையின் தலைவர்.) 12—9—48.